உ

கடவுள்துணை.

# தர்க்காமிர்தம்.

### கணபதிவணக்கம்.

சங்கர னுமையரு ளோங்கர னிணைமலர்
தங்கியென் னகமதி லிங்கிது தருமே.

### குருவணக்கம்.

ஐய மேதுமி றருக்கநல் லமிழ்தினை யமரர்
தூய்ய வாணியி னின்றெழிற் சுத்தமாந் தமிழிற்
செய்ய யாதொரு குறைவுறா தருண்மிகச் செயலே
செய்ய வீரநற் சேகரன் றிருவடி தொழுவாம்.

### திருமால்வணக்கம்.

நிகிலரும் பணிய விரும்பிய தருளு நிலையய ஞா யா மமர, ரகவிருத் திகள தனைத்தையு மெதன்கண் ணவித்தைய தழிந்திட வமைப்பர், பருபவப் பயத்தை யொழியொரு விதையாய்ப் பரமமா மரிபத மரையை யகமரை யதனி னிறுவிநல் லுவமை யறுதர்க்க வமி தமீ தறைவாம்.




# தர்க்காமிர்தம்.

## நூல்.

"அரே! மயித்திரேயி! ஆத்மா பார்க்கத்தக்கது, கட்கத்தக்கது, கருதத்தக்கது, தியானிக்கத்தக்கது" ன்று சுருதி கேட்கப்படுகின்றது.

இதன்பொருள் முமுட்சுவால் ஆத்மா பார்க்கத் க்கதென்பது; முமுட்சுவிற்கு ஆத்மதரிசனம் இஷ்ட ாதனமென்னுமளவு. ஆத்மதரிசன வுபாயம் யாது ான்பதில் 'கேட்கத்தக்கது' முதலியன கூறப்படுகின் றன.

அவ்வர்த்தக்கிரமத்தால் சத்தக்கிரமம் நீக்கப்படு கின்றது.*; அக்னி ஹோத்திரம் ஜுஹோதி (அக்னி ஹோத்திரஞ் செய்கின்றான்), அடிசிலடுகின்றான் என் றற்றொடக்கத்தனபோல். எனவே சிரவண, மநந, நிதித் ாசனங்கள் தத்துவஞான ஜனக (காரண) ங்களென்று கூறப்பட்டன.

---

* காரியத்திற்குக் காரணத்தின் பின்னிருக்குந் தன்மை யுண்மையின்.

ஈண்டுச் சுருதியாற் செய்யப்பட்ட சிரவணத்திற்கு மநநத்தின்கண் அதிகாரம்; மநநமும் ஆத்மாவிற்கு இதர பின்னத் தன்மையானே அநுமானம் *; அதுவும் பேதப்பிரதியோகி இதர ஞானசாத்தியம் †. அவ்வாறாயின், இதர மென்பது யாதென்னு மாசங்கையை யொழித்தற் பொருட்டுப் பதார்த்த நிரூபணஞ் செய்யப்படுகின்றது.

## பதார்த்தம்.

சங்கிரகமாகப் பதார்த்தம் இருவகைத்து ‡; பாவமும் அபாவமு மென.

---

* ஆன்மா, இதரங்களினின்றும் பேதிக்கின்றது; ஆன்மத்தன்மை யுடைமையின்; யாது இதரங்களினின்றும் பேதிக்கவில்லையோ அஃது ஆன்மத்தன்மை யுடையதன்று; எங்ஙனம்? கடமுதலியன; இஃது தங்ஙனமன்று.

† அபாவ வுணர்ச்சியில் பிரதியோகி ஞானத்திற்கு ஏதுத்தன்மை யுண்மையால் என்பது பாவம் (தாற்பர்யம்).

‡ உள்விபாகத்தோடு கூடிய உபாதி யிரண்டன் விசிஷ்டம்.

# பாவ பதார்த்தம்.



திரவிய குண கர்ம சாமாநிய விசேஷ சமவாய பேதத்தால் பாவம் அறுவகைத்து. அவற்றுள், திரவியத்துவ, குணத்துவ, கர்மத்துவங்கள் ஜாதிகள் * சாமாநியத்துவாதி உபாதிகள்.

## 1. திரவிய நிருபணம்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் எனத் திரவியம் ஒன்பது வகைத்து.

ஆகாசத்துவ, காலத்துவ, திக்குத்துவங்கள் உபாதிகள் †. ஏனையவை ஜாதிகள்.



---

* சம்யோக விபாக சமவாயி காரணத்துவாவச்சேதகத் தன்மையானே திரவ்யத்வமும், குணபத சக்யத்வாவச்சேதகத் தன்மையானே குணத்வமும், அலேகின்றது என்னுமநுகதப் (தொடர்ந்த) பிரத்யக்ஷ விஷயத்தன்மையானே கர்மத்வமும் சித்தமாம்.

† உபாதிகள் - அகண்ட தருமங்கள்.

## I. குணசிரயப் பிரக்கிரியை.

(1) அவற்றுள், பிருதிவியின்கண் உருவம், இரசம், கந்தம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சம்ஸ்காரம் எனப் பதினான்கு குணங்களுள.

(2) அப்புவிற்கு அப்பதினான்கு குணங்களுள்ளேயே கந்தத்தை விடுத்துச் சினேகத்தைச் சேர்க்கப் பதினான்கு குணங்களுள.

(3) தேயுவிற்கு உருவம், பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், திரவத்துவம், சம்ஸ்காரமெனப் பதினொரு குணங்களுள.

(4) வாயுவிற்குப் பரிசம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், சம்ஸ்காரமென ஒன்பது குணங்களுள.

(5) ஆகாசத்திற்குச் சப்தம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகமென ஆறு குணங்களுள.

(6) & (7) காலத்திற்கும் திக்கிற்கும் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாக மென ஐந்து குணங்களுள.

(8) ஆத்மாவிற்குச் சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம், சம்ஸ்கார மெனப் பதினான்கு குணங்களுள.

(9) மனத்திற்குச் சங்கை,பரிமாணம்,வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், சம்ஸ்கார மென எட்டுக் குணங்களுள.

ஈசுவரனுக்கு ஞானம், இச்சை, முயற்சி, சங்கையாதி (சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம்) ஐந்து, ஆக எட்டுக் குணங்களுள.

“வாயுவிற்குக் குணம் ஒன்பது ; தேயுவிற்குக் குணம் பதினொன்று; அப்பு, பிருதிவி, ஆன்மா இம்மூன்றற்குங் குணம் தனித்தனி பதினான்கு; திக்கிற்குங் காலத்திற்கும் ஐந்தைந்து; ஆகாசத்தி லாறே; மகேசுவரனிடத்து எட்டு ; மனத்திற்கு மவ்வாறே (8)” என்று கூறப்பட் டிருக்கின்றது.



இவ்வைந்தும் புறவிந்திரியங்கள்; மனம் அகவிந்திரியம். அதனால் இந்திரியங்கள் ஆறும்.

III. விஷயங்கள் சப்தாதி வடிவத்தாற் பிரசித்தம்.



## iii. ஆத்ம விபாகம்.

ஆத்மா ஜீவாத்மா, பரமாத்மாவென இருவகைத்து.

அவற்றுள், ஜீவாத்மா சரீரந்தோறும் பின்னம் (வேறு); பந்தமோட்ச யோக்கியம்.

பரமாத்மா ஈசுவரன்.



## iv. பிரத்தியட்ச அப்பிரத்தியட்சத் திரவியம்.

பரமாணு துவியணுகங்கள் அப்பிரத்தியட்சம்.

எவற்றின்கண் மகத்துவ வுற்பூதவுருவ மிருக்கின்றனவோ அந்தப் பிருதிவி அப்பு தேயுக்கள் பிரத்தியட்சங்கள்.

ஆத்மாவும் பிரத்தியட்சம் *.

* பிரத்யக்ஷங்கள்—பாகியேந்திரிய ஜன்ய லௌகிகப் பிரத்யக்ஷ விஷயங்கள். பிரத்யக்ஷம்—மானதப் பிரத்யக்ஷம்; மானதப் பிரத்யக்ஷ நிரூபித லௌகிக விஷயத் தன்மைக்காஸ்ரயம் என்பது பொருள்.

இவ்வைந்தும் புறவிந்திரியங்கள்; மனம் அகவிந்திரியம். அதனால் இந்திரியங்கள் ஆறும்.

III. விஷயங்கள் சப்தாதி வடிவத்தாற் பிரசித்தம்.



## iii. ஆத்ம விபாகம்.

ஆத்மா ஜீவாத்மா, பரமாத்மாவென இருவகைத்து.

அவற்றுள், ஜீவாத்மா சரீரந்தோறும் பின்னம் (வேறு); பந்தமோட்ச யோக்கியம்.

பரமாத்மா ஈசுவரன்.



## iv. பிரத்தியட்ச அப்பிரத்தியட்சத் திரவியம்.

பரமாணு துவியணுகங்கள் அப்பிரத்தியட்சம்.

எவற்றின்கண் மகத்துவ வுற்பூதவுருவ மிருக்கின்றனவோ அந்தப் பிருதிவி அப்பு தேயுக்கள் பிரத்தியட்சங்கள்.

ஆத்மாவும் பிரத்தியட்சம் *.

---

* பிரத்யக்ஷங்கள்=பாகியேந்திரிய ஜன்ய லௌகிகப் பிரத்யக்ஷ விஷயங்கள். பிரத்யக்ஷம்=மானதப் பிரத்யக்ஷம்; மானதப் பிரத்யக்ஷ நிரூபித லௌகிக விஷயத் தன்மைக்காஸ்ரயம் என்பது பொருள்.

வாயு, ஆகாசம், காலம், திக்கு, மனம் என்பன அப்பிரத்தியட்சங்கள்.

பாகியத் திரவியப் பிரத்தியட்சத்தைக் குறித்து மகத்துவத்தோடு கூடிய உற்பூத வுருவத்தை யுடைய தாந் தன்மை பிரயோசகம் * (ஏது).



## V. திரவியோற்பத்திப் பிரக்கிரியை.

அவற்றுள், காரணமுடையதற்கேஉற்பத்தியுண்டு. அநந்நியதாசித்த † நியத பூர்வவர்த்தி காரணம்; அத் தன்மை காரணத்தன்மை.

அக்காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என மூவகைத்து.

I. எதன்கண் சமவேதித்துக் காரியந் தோன்றும் அது சமவாயிகாரணம் ; எங்ஙனம் ? துவியணுகத்திற் குப் பரமாணு; கடத்திற்குக் கபாலம்.

---

* மகத்வம், பரமாணு துவியணுகங்களின் நிவாரணத் தின் பொருட்டும், உற்பூதத்வம் கிராணாதி நிவாரணத்தின் பொருட்டும், ரூபவத்வம் வாயுநிவாரணத்தின் பொருட்டுமாம்.

† அநந்நியதாசித்தம்-பிறிதோராற்றாற் பெறப்படாதது.

II. சமவாயி காரணத்திற் சம்பந்தமுடைய காரணம் அசமவாயிகாரணம்; எங்ஙனம்? துவியணுகத்திற்குப் * பரமாணுத்துவய சையோகம்; கடரூபத்திற்குக் கபாலரூபம்.

III. இவ்விரண்டினும் வேறாயகாரணம் நிமித்த காரணம். எங்ஙனம்? துவியணுகத்தில் ஈசுவரன், கடத்தில் தண்டம் (நிமித்தகாரணமாம்).

இம்முக்காரணங்களும் பாவகாரியத்திற்கே(யுண்டு).

அவற்றுள்; திரவியமே சமவாயிகாரணம்.

திரவியத்தில் குணம், குணத்தில் குணமுங் கர்மமும் † அசமவாயி காரணமாம்.

## vi. சாதாரண காரணங்கள்.

காரியமாத்திரத்தைக் குறித்து ஈசுவரனும், அவனது ஞானம், இச்சை, பிரயத்தினங்களும், பிராக

* பரமாணுத்துவய-இரண்டுபரமாணுக்களின்.

† குணம்—அவயவ சம்யோகாதி; குணத்தில், காரியத்தினது குணமாகிய சுக்ல ரூபாதியில்; குணம், சமவாயி காரணத்தினது குணமாகிய சுக்ல ரூபாதி; கருமம், கிரியை சம்யோக வியாகங்களினது அசமவாயி காரணம் என்பது பொருள்.

பாவம், காலம், திக்கு, அதிர்ஷ்டங்களும் ஆகிய † எட்டும் சாதாரண காரணங்களாம்.

ஆண்டுப் பரமாணுத்துவய சையோகத்தினால் துவியணுகமுண்டாகின்றது. சம்யுக்தமான (சையோகத்தையுடைய) துவியணுகத் திரயத்தால் திரியணுக முண்டாகின்றது.

இவ்வாறே சதுரணுகாதி கபாலபரியந்தம். கபாலத்துவய சம்யோகத்தினாற் கடமுண்டாகிறது. கடமோ அந்தியாவயவி (ஈற்றவயவமுடையது).



## vii. திரவியப்பிரமாணப் பிரக்கிரியை.

திரவியத்திற் பிரமாணங் கூறப்படுகின்றது.

பிரத்தியட்சத் திரவியத்தின்கண் பிரத்தியட்சமே பிரமாணம்; அதீந்திரியத்தின்கண் அநுமானம். அது பட்ச ஹேது சாத்திய திருஷ்டாந்த ஞானசாத்தியம். விசேஷமாக மேற்கூறப்படும்.

பரமாணு துவியணுகங்கட் கநுமான மெங்ஙனம்? திரிசரேணு (திரியணுகம்) சாவயவத் திரவியத்தால்

† பிரதிபந்தகாபாவத்தைச் சேர்த்து ஒன்பதென்பாரு முளர்.

்க்கப்பட்டது; பகிரிந்திரியத்தா லறியப்படுந் திரவி த்தன்மையால்; யாது பகிரிந்திரியத்தா லறியப்படுந் ிரவியம் அது சாவயவத் திரவியத்தா லாக்கப்பட் டது; கடம் போல்.

ஈண்டுத் திரிசிரேணு பட்சம்; சாவயவத் திரவி ாத்தா லாக்கப்படுந் தன்மை சாத்தியம்; பகிரிந்திரி ாத்தா லறியப்படுந் திரவியத் தன்மையா லென்பது ீஹேது *; கடம் திருட்டாந்தம்.

இதனல் துவியணுகமும் பரமாணுவும் பெறப்பட் டன.

ஆகாயமும் வாயுவும் முறையே சப்தத்தாலும் பரி சத்தாலும் அநுமிக்கப்படுவன.

சப்தம் திரவியாசிரயம்; குணத்தன்மையால்; கட ரூபம் போல்.

---

* மனத்திற்கு விஷயமான ஆத்மாவின்கண் வியபி சார நிவாரணத்தின் பொருட்டுப் பாகிய பதமும், ரூபத்வாதிக ளில் வியபிசார நிவாரணத்தின் பொருட்டுத் திரவியபதமும் கூறப்பட்டன.

இதனால் அந்நிய திரவிய * பாதத்தால் † சப்தாசிரயத் தன்மையானே ஆகாசம் சித்திக்கின்றது ‡.

பிருதிவியாதி மூன்றன்கண் § அவிர்த்தியான இப்பரிசம் திரவியாசிரிதம்; குணத்தன்மையால் என்னு மநுமானத்தால் திரவியாந்தர பாதத்தால் ஸ்பரிசாசிரயத் தன்மையானே வாயு சித்திக்கின்றது.

காலத்திற் பிரமாண மெங்ஙனம்?

பரத்துவாபரத்துவங்கள் ¶ காலிகம் ‡‡ தைசிகம் என இருவகை. பரத்துவோற்பத்தியும் 0 பகுதரமாகிய சூரியனது கிரியாவிசிஷ்டசரீர ஞானத்தால்; அபரத்துவோற்பத்தியும் $ சொற்பதரமாகிய சூரியனது கிரியாவிசிஷ்ட சரீரஞானத்தா லுண்டாமென்க.

அந்தப் பரத்துவம் ஜேஷ்டத் தன்மை; அபரத்துவம் கனிஷ்டத் தன்மை.

---

* பாதம்-விலக்குதல். † சப்தாசிரயம்-சப்தத்திற்குப் பற்றுக்கோடு. ‡ அன்னியத்தில் அசம்பவத்தால் பரிசேஷத்தாற் சித்தியாம். § அவிர்த்தி - இராமை. ¶ காலிகம்-காலசம்பந்த முடையது. ‡‡ தைசிகம்-தேச (இட)சம்பந்த முடையது. 0 பகுதரம்-மிகுதி. $ சொற்பதரம்-குறைவு.

அவ்வநுமான மெங்ஙனம்?

பாத்துவ ‡ ஜனகமாகிய பகுதா சூரியக்கிரியா விசி ட (கூடிய) சரீரஞானமாகிய இது * பரம்பரா சம் த $ கடக சாபேட்சம்; சாட்சாத்சம்பந்த மில்லா மையோடு விசிஷ்டஞானத் தன்மை யுண்மையின்; சிக வல (படிக) மென்னும் ஞானம் போல்.

பரம்பரா சம்பந்தமும் † சுவ (தனது) சமவாயி ம்யுக்த சம்யோகமாம்.

அதனுல், சம்பந்த கடககாலம் சித்திக்கின்றது.

அற்றுயின், (அது) பூதபௌஷ்ய வர்த்தமான பதத்தால் அனேகத் தன்மையதாதலின் ஏகத்துவ மன்ப தெவ்வாறெனின்,

---

‡ ஜனகம்-உண்டுபண்ணுவது.

* சரீரத்தை விசேஷ்யமாகவுடைய கிருதி (கினமுத ிய) ரூபரவிக்கிரியா விசிஷ்டஞானம் பக்ஷம்.

‡‡ கடகம்-நிகழ்வது.

† சுவ-ரவிக்கிரியை, அதன் சமவாயி - ரவி, அதன் சம் க்தம்-காலம், அதன் சம்யோகம்-நம்மனோராதியினிடத்தாம்.

உபாதி பேதத்தாற் பேதப்பிரதீதி யுண்டாதலி ெனன்க.

காலவுபாதிகள் சூரியனது கிரியாதி ரூபங்களாகிய பின்னங்களே.

இவ்வாறே தைசிக பரத்துவ அபரத்துவங்களால் திக்கு சித்திக்கின்றது. அவையும் தூரத்துவம் சமீபத்துவம்.

* அவதியை (எல்லையை) யபேட்சித்த பகுதர சையோக விசிட்ட சரீர ஞானமாகிய இப்பரத்துவகாரணம் பரம்பரா சம்பந்த கடக சாபேட்சம் என்றற்

---

* அவதியை யபேக்ஷித்த என்பது, எங்ஙனம்? பிரயாகையினின்றும் காசியைக்குறித்துக் கயைபரம்,கயையைக்குறித்துக் காசிஅபரம். ஈண்டு முதலில் அவதி காசி; அதன் அபேக்ஷயால் பிரயாகையை அவதியாகவுடைய பகுதர சம்யோகமுடைமை கயையில். இரண்டாவதில் அவதி கயை; அதனபேக்ஷயால் பிரயாகையை அவதியாகவுடைய அற்பதர சம்யோகமுடைமை காசியில். பிரயாகையைப் பிரதியோகியாகவுடைய பகுதர சம்யோகம் கயையிலின்று; பிரயாகைசம்யுக்ததேசியமு (தேசசம்பந்த முடையது) மன்று; பின்னையோ காசியபேக்ஷயால் பிரயாகையை அவதியாகவுடைய பகுதர மத்யவர்த்தி (மத்தியிலுள்ள) தேச சம்யோகங்கள்

ரூடக்கத்தன முன்போனுணர்க. அதனல் திக்கு சித்தித்தது.

ஆகாசமே சம்பந்த கடகமாகலாமென்று கூறற்க; அதற்குச் சப்தாசிரயத் தன்மையாலேயே ‡ தர்மிக்

யாவையோ அவையுடைமையாம். அதுவும் சாக்ஷாத் அன்று; பின்னையோ அவ்வளவு சமவாயிசம்யுக்தத்தன்மை வடிவ பரம்பரையாலாமென, அவ்வளவு சமவாயியாய திக்கின்சித்தியாம். பிரயாகையின் சமீபத்திலிருப்பதன் கண்ணும் அவ்வாருய எவ்வளவு சம்யோகாஸ்ரயமாய திக்கின் சம்யோகத்தினது இருப்புண்மையால் பரத்துவத்தி னடைவுண்டாமென்று கூருதொழிக; அத்தேசத்தைப் பிரதியோகியாக வுடைய சம்யோகமுமென அதைப் பிரதியோகியாகவுடைய சம்யோகத்திற்கு அதில் சாக்ஷாத் தாகவேனும் பரம்பரை யாகவேனும் அங்கீகாரம் இன்மையால்.

* தர்மியாகிய ஆகாசத்தினது கிராககமாய யாதொரு பிரமாணமான முற்கூறிய சப்தத்தைப் பக்ஷமாகவுடைய அனுமிதியோ சப்தாஸ்சிரியத் தன்மையானே சமஞான விஷயத் தன்மையால் அதன் விஷயத்தன்மை யுண்மையாலென்பது பொருள். அவற்றினுக்குச் சம்பந்த கடகத்தன்மை யுண்டெனின் இமயகிரியின் கண்ணும் விந்தியமுடைமைப் பிரதீதியினடைவுண்டாம்; காலதிசைகட்கோ எச்சம்பந்த கடகத்தன்மையானே சித்தியோ அவ்விசிஷ்ட புத்திமாத்திர நியாமகத்தன்மையானே அதிப்பிரசங்க மின்மையின்.

கிராககப் பிரமாணம் சித்தித்தலின்; சூரியனது கிரியையாதியின் உபநாயகத்தன்மைச் சம்பவமின்று.

நான் சுகி என்றற்றொடக்கத்துப் பிரத்தியட்சம் ஆத்மாவினிடத்துப்பிரமாணம். ஈசுவரனிலோ அநுமானம், எங்ஙனம்:—க்ஷிதி கர்த்தாவை யுடையது; காரியத்தன்மையால்; கடம் போல் †

அதனால் ஈசுவரனும், அவன்கண்ணுள்ள நித்திய இச்சாஞான முயற்சிகளும், சர்வஞ்ஞத்துவமும் சித்தித்தன.

மனத்தின்கட் பிரமாணம் எங்ஙனம்:—சுகாதிப் பிரத்தியட்சம் இந்திரிய ஜன்னியம்; ஜன்னியப் பிரத்யட்சத் தன்மையால்; கடப்பிரத்தியக்ஷம்போல். எனவே, இந்திரியாந்தர பாத முண்டாங்கால் மனத்தினது சித்தியாம்.



† க்ஷிதியென்பதற்குத் துவியணுகமென்பது பொருள். அதனால், க்ஷிதித்வ சாமானாதி கரண்யத்தால் சகர்த்ருகத்வத்தைச் சாதிப்புழிச் சித்தசாதனமாம்; அவச்சேதகத்தி னவச்சேதத்தால் அதனைச் சாதிப்புழிப் பாதமாம்; படாதிகளில் நெய்வோன்முதலிய சர்த்ருகத்வத்தினது சித்தியாலும் சித்திய

## viii. திரவியநாசப் பிரக்கிரியை.

திரவியநாசம் இருவகைத்து; சில அசமவாயி காரண நாசத்தால், சில சமவாயிகாரண நாசத்தால் (உண்டாம்). அவற்றுள், முதலது எங்ஙனம்:—

பரமாணுத்துவய சம்யோக நாசத்தால் துவிணுக நாசம்.

இரண்டாவ தெங்ஙனம்:—கபாலநாசத்தால் கடநாசம்.

டநாசம் இருவகையானும் சம்பவிக்கின்றது †

---

ாகிய பரமாணு முதலியவற்றில் சகர்த்ருகத்வத்தினது அபா த்தாலும் நிராகரிக்கப்பட்டது. பிராகபாவப் பிரதியோகியா ம் துவம்சப்பிரதியோகியாயும் இருப்பது காரியம்; அதனால் வம்சத்தில் வியபிசாரமின்று.

† இருவகையானும் - சமவாயிகாரணநாசத்தாலும் அசம ாயிகாரணநாசத்தாலும் என்பது. துவியணுக நாசமோ அவ் றன்று; அதன் சமவாயிகாரணமாய பரமாணுவிற்கு நித் யத்தன்மை யுண்மையின்.

ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, பரமாணுக்கள் அவிர்த்திகள்; சமவாயமும்.

பிருதிவியாதி ஐந்திற்கும் பூதத்துவம் (உண்டு).

பிருதிவி, அப்பு, தேயு, வாயு மனமென்னும் ஐந்தினிடத்தும் மூர்த்தத் தன்மையும் † கிரியாவத்துவமுமுண்டு.

பிருதிவி, அப்பு, தேயு, வாயுக்கள் திரவிய சமவாயி காரணங்கள்.

காலிக சம்பந்தத்தால் காலத்திற்குச் சர்வாதிகரணத்தன்மை யுண்டு.

தைசிக சம்பந்தத்தால் திக்கிற்குச் சர்வாதிகரணத் தன்மை யுண்டு.

திரவியநிருபணம் முற்றிற்று.



† பகிரிந்திரிய கிராஹ்ய விசேஷகுணமுடைமை பூதத்வம், கிரியையின் சமவாயிகாரணத்தன்மையி னவச்சேதகத் தன்மையால் சித்தமான ஜாதிவிசேஷம் மூர்த்தத்வம்.

## 2. குணநிரூபணம்.



குணங்கள் கூறப்படுகின்றன.

உருவம், இரசம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபாரத்துவம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, குருத்துவம், திரவத்துவம் சிநேகம், சம்ஸ்காரம், தர்மம், அதர்மம், சப்தம் எனக் குணங்கள் இருபத்து நான்கு.

ஈண்டு ரூபத்துவாதியாவும் ஜாதியே.



### 1. குணவிருத்திப் பிரக்கிரியை.

(1) உருவம் பிருதிவி, அப்பு, தேயுக்களி லிருப்பது.

அதுவும் வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, சித்திராதி பேதத்தாற் பகுவிதம்; இவை பிருதிவியின்க ணிருப்பன.

விளக்கமில்லாத வெண்மை ஜலத்தி லிருப்பது; விளக்கமுள்ள வெண்மை தேயுவி லிருப்பது.

(2) இரசம் பிருதிவி ஜலங்களி லிருப்பது.

அதுவும் தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு,

கைப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டால் அறுவகைத்து; இவை பிருதிவியின்கணிருப்பன.

ஜலத்தில் மதுரரச மாத்திரமே.

(3) கந்தம் நறுநாற்றம் தீநாற்றமென விருவகைத்து; பிருதிவி மாத்திரத் திருப்பது.

(4) பரிசம் பிருதிவியாதி நான்கன்கணிருப்பது.

அதுவும் சீதம், உஷ்ணம், அனுஷ்ணசீதம் (வெப்பமும் தட்பமுமின்மை) என மூவகைத்து.

அனுஷ்ணசீதஸ்பரிசம் பிருதிவி வாயுக்களிலிருப்பது; ஜலத்தின்கண் சீதம்; தேயுவின்கண் உஷ்ணம்.

(5) சங்கியை, (6) பரிமாணம், (7) வேற்றுமை, (8) சையோகம், (9) விபாகம் என்னும் ஐந்தும் ஒன்பது திரவியங்களிலு மிருப்பன.

(10) – (11) பரத்துவா பரத்துவங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு மனங்களி லிருப்பன.

(12) புத்தி, (13) சுகம், (14) துக்கம், (15) இச்சை,

(16) துவேஷம், (17) பிரயத்நம், பாவனை, (18) தர்மம், (19) அதர்மம் ஆகிய இவ்வொன்பதும் ஆத்மாவின்க ணிருப்பன.

(20) குருத்துவம் பிருதிவி ஜலத்தின்க ணிருப்பது.

(21) திரவத்துவம் பிருதிவி, அப்பு, தேயுக்களி லிருப்பது. அதுவும் நைமித்திகம் சாம்சித்திகமென விருவகைத்து.

முதலது பிருதிவி, தேயுக்களி லிருப்பது; இரண்டாவது ஜலத்தின்கண் (இருப்பது).

(22) சிநேகம் ஜலமாத்திரத் திருப்பது.

(23) சம்ஸ்காரம் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆன்மா, மனங்களி லிருப்பது.

அதுவும் வேகம், பாவனை, திதித்தாபகம் என மூவகைத்து. அவற்றுள்,

i. வேகம் பிருதிவியாதி நான்கிலும் மனத்திலு மிருப்பது.

ii. பாவனை ஆத்மாவி லிருப்பது.

iii. திதித்தாபகம் பிருதிவியாதி நான்கன்க ணிருப்பது.

(24) சப்தம் ஒலிவடிவு எழுத்துவடிவு என இருவகைத்து; ஆகாசமாத்திரத் திருப்பது.

விசேடகுணங்கள் - 16.

உருவம், இரசம், கந்தம், ஸ்பரிசம், ஸ்நேகம், சாம்சித்திகத் திரவத்துவம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்நம், தர்மம், அதர்மம், பாவனை என்பன விசேடகுணங்கள்.

சாமாநிய குணங்கள் - 9.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், குருத்துவம், நைமித்திக திரவத்துவம், வேகம், திதித்தாபகம் என்பன சாமாநியகுணங்கள்.

நித்திய குணங்கள்.

அப்பு, தேயு, வாயு, பரமாணுக்களின் விசேட குணங்களும், பரமாணுவின்கணுள்ள ஸ்திதித்தாபகமும், விபுக்களிலும் பரமாணுக்களிலு முள்ள ஏகத்துவம் பரிமாணம் வேற்றுமைகளும், ஈசுவர னிடத்துள்ள இச்சா ஞானப் பிரயத்நங்களும் நித்தியகுணங்களாம்.

## அப்பிரத்தியட்ச குணங்கள்.

குருத்துவம், தர்மம், அதர்மம், பாவனை, ஸ்திதித் தாபகங்களும், பரமாணு துவியணுகங்களிலுள்ள குணங்களும், அதீந்திரியங்களிலுள்ள சாமாநிய குணங்களும், திரியணுகத்தின் உருவமொழிந்த வேனைய குணங்களும் அதீந்திரியங்கள்.



## ii. பிரத்தியட்சப் பிரயோஜகம்.

உருவம், இரசம், கந்தம், பரிசம், சிநேகமென்னு மிவற்றின் பிரத்தியட்சத்தில் மகத்துவத்தோடுள்ள உற்பூதத் தன்மை பிரயோஜகம்; சாமாநிய குணப் பிரத்தியட்சத்திலோ ஆசிரயப் பிரத்தியட்சமும், புத்திப் பிரத்தியட்சத்தில் தன்மாட்டுள்ள விசிஷ்டஞானத் தன்மையும், சுகாதிப் பிரத்தியட்சத்தில், தன்னிடத் துள்ள சுகத்துவாதி முதலியனவுமே (பிரயோஜகம்). ஆதியந்த சப்தங்களொழிய வேனைய வெல்லாச் சப்தங்களும் பிரத்தியட்சங்கள்.



## iii. குணோற்பத்திப் பிரக்கிரியை.

அவயவத்தின்கணுள்ள விசேடகுணங்கள் அவயவி

யின்கண் தமது சமான ஜாதியோடு கூடிய குணங்களைத் தோற்றுவிப்பன †

பிருதிவியின் விசேடகுணங்கள் ‡ பாகஜங்கள். அவை பாகப்பிரயோஜ்ஜியம் பாகஜன்னியமென் றிரு வகைப்படும்.

I. காரண குணத்தின் கிரமத்தாற் றோற்றுவன பாகப் பிரயோஜ்ஜியங்கள்.

II. அக்னியின் சையோகத்தாற் றோற்றுவன பாக ஜன்னியங்கள்.

(1) நீலக்குடத்தில் அக்னி சையோகத்தால் நீல ரூப நாசத்தின்பின் கடத்தில் செந்நிற முண்டாகின்ற தென்பது நையாயிகமதம்.

(2) அக்னி சையோகத்தால் பரமாணுவின்கண் பாக முண்டாயவிடத்துப் பரமாணுக்களில் செந்நிற முண்டாகின்றது; பின்னர்க் கடோற்பத்தி யாகுமிடத்

---

† சுவ விருத்தி ரூபத்வாதிகளாகிய வியாப்பியஜாதியை யுடைய குணங்களை.

‡ பாகம்-தேயுவின் கூட்டம்.

தாக் காரணகுணக் கிரமத்தாற் கடத்திற் செந்நிற முண்டாகின்றதென்பது வைசேடிகமதம்.

ஒரு கபாலம் நீலமும் மற்றொரு கபாலம் பீதமு மாயவிடத்துக் கடத்திற் சித்திரரூப முண்டாகின்றது.

இரசாதிகளி விவ்வாறுயவிடத்து அவயவியின் கண் இரசமுதலியன வுண்டாதலில்லை; சித்திரசாதி களை யங்கீகரித்த லின்மையின். குருத்துவமும் திதித் தாபகமும் காரணகுணக்கிரம ஜன்னியத்துவம்.

துவித்துவாதிகள் (இருமை முதலியன) அபேட் சா புத்தி ஜன்னியங்கள் †

அணு, மகத்து, ஹ்ரஸ்வம், தீர்க்கம் எனப் பரிமா ணம் நான்கு வகைத்து; அது காரணகுணக்கிரம ஜன் னியம்.

தன தவயவத்தின் பகுத்துவம் மகத்துவ ஜனகம்; எங்ஙனம்:— திரிசிரேணுக்கட்கு அவயவங்களினது சிதி லசையோகப் பிரசயமும் அதனது காரணம்; எங்ங னம்:— தூலபரிமாணம் ‡

---

† நாநா ஏகத்வங்களை யொருமையாகக் கிரகிக்கும் புத்தி அபேக்ஷா புத்தி.

‡ சிறிதவயவ அனவச்சின்னத்வம் சிதிலத்வம். உண் மையாகச் சிதிலத்வம் ஜாதிவிசேஷமாம்.

வேற்றுமை காரணகுணக் கிரமத்தாற் றோன்று வது. அற்றேல், அதிற் பிரமாணம் யாது? கடத்தினும் படம் வேறென்னும் பிரத்தியட்சமாம்.

அவ்வேற்றுமைக்கு அந்நியோந்நியாபாவ விஷய கத்தன்மை யெனின், அது கூடாது; அந்நியோந்நியா பாவ ஞானத்தில் பிரதியோகி அநுயோகிகட்குச் சமான வேற்றுமைத் தன்மை நியமமா யிருத்தலின். எங்ஙனம்:—கடம் படமன்று என்பது.

அந்நியோந்நியாபாவத்திற்குப் பிருதக்த்துவ ரூப த்துவம் அங்கீகரிக்கின், கடத்தினின்றும் படமில்லை யென்னும் பிரயோகத்தி னடையுண்டாம். ஆயின், கட த்தி னின்றும் அந்நியம் படமென்னு மிதில் அந்நி யோந்நியாபாவப் பிரதீதி யெவ்வாறென்று கூறற்க; அந் நியத் தன்மைக்கும் பிருதக்த்துவத்தின் வடிவத் தன் மை யுண்மையால்.

சையோகம்.

சையோகம் அந்நியதர கர்மஜம், உபயகர்மஜம், சையோகஜம் என மூன்றுவகைத்து †

† சம்யோகவிபாகங்களின் அநபேக்ஷகாரணம் கர்மம் என்பது சூத்திரம்.

(1) முதல தெங்ஙனம்:—மனத்தின் கர்மத்தால் ஆத்ம மனங்களின் சையோகம்.

(2) இரண்டாவ தெங்ஙனம்:—மேஷங் (ஆட்டுக் கடாக்) களின் கர்மத்தா லவற்றின் சையோகம்.

(3) மூன்றுவ தெங்ஙனம்:—காரணாகாரண சையோகத்தாற் காரியாகாரிய சையோகம். எங்ஙனம்:—கரதருசையோகத்தால் காயதரு சையோகம்.

## விபாகம்.

அந்நியதர கர்மஜம், உபயகர்மஜம், விபாகஜம் என விபாகம் மூன்றுவகைத்து.

(1) அந்நியதரகர்மஜம் எங்ஙனம்:— மனத்தின் தொழிலால் ஆத்ம மனங்களின் விபாகம்.

(2) உபயகர்மஜம் எங்ஙனம்:—மேஷங்களின் கர்மத்தால் அவற்றின் விபாகம்.

(3) விபாகஜவிபாகம் காரணமாத்திர விபாகஜ மெனவும் காரணாகாரண விபாகஜ மெனவும் இரு வகைத்து.

(i) காரணமாத்திரவிபாகஜம் எங்ஙனம்:— கபாலத்தின் கர்மத்தால் கபாலத்துவயங்களின் விபாகம்; அதன் பின்னர்க் கபாலத்துவய சையோகநாசம்; அதன்பின் னர்க் கடநாசம்; அதன்பின்னர்க் கபாலத்திற்கு ஆகா சாதி தேசத்தினின்றும் விபாகஜ விபாகமாம்.

விபாகம் தன துற்பத்தியின் பின்னரேயே விபா கஜ விபாகத்தை யுண்டாக்கலாமே யென்று கூறற்க; திரவிய நாசத்தோடு கூடியவதற்கே அதனை யுண்டு பண்ணுந்தன்மை யுண்மையின், அதன்கண் திரவி யத்திற்குப் பிரதிபந்தகத் தன்மை யுண்மையால் திரவிய முள்ள விடத்து அதனது உற்பத்தி யின்மையின் †

கர்மமே யொரே காலத்தில் கபாலத்துவய விபா கத்தையும் ஆகாச கபால விபாகத்தையும் தோற்று விக்கு மென்று கூறற்க; திரவியத்தை யுண்டுபண்ணாத சையோகத்திற்கு விரோதியாகிய விபாகத்தை யுண்டு பண்ணாதது யாது அது திரவியத்தை யுண்டுபண்ணுஞ் சையோகத்திற்கு விரோதியாகிய விபாகத் தைத்

† விபாகஜன்னிய விபாகம் சம்பவியாமையின்.

தோற்றுவிப்பதாதலின். அவ்வாறன்றாயின், விகசித தாமரையினது குட்மலதல கர்மத்தின்கண் அதிவியாப்தியாம் †

சையோகத்தின் கண்ணும் இவ்வாறாகு மென்று கூறற்க; ஆண்டவிரோத முண்மையின்.

(ii) இரண்டாவதோ காரணாகாரணங்களின் விடாகத்தாற் காரியா காரியங்களின் விபாகம். எங்ஙனம்:— கரதரு விபாகத்தாற் காயதருவிபாகம்.

பரத்துவாபரத்துவங்களி னுற்பத்தி காலப் பிரகரணத்திற் கூறப் பட்டது.



† விகசித கமல மொட்டின் பங்கத்திலேயே விபக்ஷ பாதக தருக்கமாம். இதுவோ வைசேஷிகமதத்தைப் பற்றியதாம். நையாயிகமதத்திலோ கர்மத்தினது கைவல க்ஷண்யத்தால் தள கருமத்திற்கு அவ்வாறு இன்றெனினும் கபாலகர்மத்திற்கு அவ்வாறிருப்பதில் பாதகமின்மையின், காரண மாத்திர விபாகஜன்யவிபாகம் அங்கீகரியாமையினென்க, கபாலகர்மம், திரவியத்தைத் தோற்றிவையாத சம்யோகவிரோதியான விபாகஜனகம்; திரவியத்தைத் தோற்றிவைக்கும் சம்யோகவிரோதியான விபாகஜனகத்தன்மையால் என்னும் வியதிரேகி யனுமானத்திலும் வைஜாத்யம் உபாதியென்பது இரகசியமாம்.

## புத்தி.

புத்தி - ஞானம்; அது நினைவும் அநுபவமுமென இருவகைத்து.

(1) நினைவு யதார்த்தமும் அயதார்த்தமு மென இருவகைத்து.

(i). அதனையுடையதன்கண் அது பிரகாரமாக நிகழுந் தன்மை யதார்த்தத்தன்மை †

(ii). அஃதில்லதன்கண் அது பிரகாரமாக நிகழுந் தன்மை அயதார்த்தத்தன்மை.

பூர்வாநுபவம் சம்ஸ்காரவாயிலாக நினைவையுண்டு பண்ணுகின்றது. ஆண்டுப் பூர்வாநுபவத்தின் யதார்த்த அயதார்த்தத் தன்மைகளால் நினைவும் இருவகைத்து.

---

† விசேஷ்யத்வம் ஏழாம் வேற்றுமையின் பொருள்; அதற்கும் நிரூபிதத்வ சம்சர்க்கத்தால் அதன்பிரகாரத்தன்மையில் அன்வயம். அங்ஙனமாக, அந்தவிசேஷ்யத்வநிரூபித அதன்கண்ணுள்ள பிரகாரத்வ நிரூபகத்வம் ஞான இச்சை கிருதி (முயற்சி) களிலுள்ள யதார்த்தத்வமாம்.

(2) அநுபவம் பிரமையும் அயதார்த்தமுமென இரு வகைத்து. ஆண்டுப் பிரமை நான்குவகைத்து; அது கூறப்படும்.

அயதார்த்தஞானம் சம்சயமும், விபர்யமும், சொப்பனமும், அநத்தியவசாயமுமென நான்கு வகைத்து.

சம்சயம் எங்ஙனம்:—

(i) சமான தர்மத்தை யுடைய தர்மிஞானத்தாலும், விசேட அதரிசனத்தாலும், கோடித்துவய (இரு தருமு) ஸ்மரணத்தாலும், இது "தாணுவா? புருடனா?" என்னும் ஞானம் ஜனிக்கின்றது; அதுவே சம்சயம்.

(ii) விபர்யயமோ சமான தர்மத்தையுடைய தர்மி ஞானத்தாலும், விசேட அதரிசனத்தாலும், ஒரு கோடிஸ்மரணத்தாலும் சுத்தியின்கண் 'இது வெள்ளி' என்னும் ஞானம் ஜனிப்பதாம்.

ஆண்டுக் குருமதத்தின்கண் 'இது' என்பது அநுபவ வடிவஞானம். "வெள்ளி" என்பது ஸ்மரண வடிவ ஞானம். அதனால் கிரஹண ஸ்மரணாத்மக(வடிவ) இருஞானமாம். இஃது இரசதத்துவ விசிஷ்ட ஞான

மன்று; அந்நியத்திற்கு அந்நியமாகத் தோற்றுஞ் சாமக்கிரி யின்மையின்,

பிரவிர்த்தியும் சுதந்தரமாகத் தோன்றுகின்ற இஷ்டபேதக் கிரஹண மின்மையின்.

நையாயிக மதத்தில் பிரவர்த்தகம் விசிட்ட ஞானம்; அதனாற் பிராந்தி சித்திக்கின்றது.

(iii) சொப்பனமோ அநுபவித்த பதார்த்த ஸ்மரணத்தாலும், அதிருஷ்டத்தாலும், தாதுதோஷத்தாலு முண்டாகின்றது.

(iv) அநத்தியவசாயமோ விசேட தரிசனமின்மையின் 'ஏதோ இஃதொன்று' என்று தோன்றும் ஞானம்.

ஈண்டு "இது வன்னி அபாவத்தை யுடைத்தாய வழித் தூமாபாவத்தையு முடைத்தாதல் வேண்டும்" என்னும் தருக்கம் விபர்யயத்தின் மத்தியி லடங்கத்தக்கது.

ஆண்டு நையாயிகமதத்தில் சொப்பன அநத்தியவசாயங்கள் விபர்யயத்தின்மத்தியில் † பிரவிஷ்டங்களாம். ஆதலின், அம்மதத்தில் அயதார்த்தஞானம்: சம்சயம் விபர்யய மென இருவகைத்து.

† பிரவிஷ்டங்கள்—புகுத்தப் பட்டனவாம்.

சுகம் தர்ம ஜன்னியம், துக்கம் அதர்ம ஜன்னியம், இச்சை இஷ்டசாதனத்துவ ஞான ஜன்னியம், துவேஷம் அநிஷ்ட சாதனத்துவ ஞான ஜன்னியம்.

முயற்சி: ஜீவனயோநி யத்ந ரூபம், பிரவிர்த்தி, நிவிர்த்தி என மூவகைத்து.

i. முதலது ஜீவனாதிருஷ்ட ஜன்னியம்.

ii. இரண்டாவது இச்சா ஜன்னியம்.

iii. மூன்றாவது துவேஷ ஜன்னியம்.

தர்மம் வேதவிகித கர்மஜன்னியம்.

அதர்மம் ‡ வேதவிருத்தாசரண ஜன்னியம்.

வேகமெனப் பெயரிய சம்ஸ்காரம் முதற் கிரியையிலாற் ஜனித்து இரண்டாவது முதலிய கிரியைகளை ஜனிப்பிப்பது. எங்ஙனம்: "விரைவாகப் பாணஞ் செல்லுகின்றது" என்பது.

பாவனை யென்னும் சம்ஸ்காரம் விசிஷ்ட ஞான ஜன்னியம்.

திதித்தாபக சம்ஸ்காரம் காரண குணப் பிரக்கிரம ஜன்னியம்.

---

‡ விருத்தாசரணம்—நிஷித்தா சரணம்.

குருத்துவம் காரணகுணப் பிரக்கிரம ஜன்னியம்.

நைமித்திகத் திரவத்துவம் அரக்கு, நெய், ஓட வைத்த சுவர்ணம் முதலியவற்றின் அக்கினி சையோக ஜன்னியம்.

ஸ்நேகம் காரணகுணப் பிரக்கிரம ஜன்னியம்.

சப்தம்: சையோகஜம், விபாகஜம், சப்தஜம் என மூவகைத்து.

i. முதலது பேரிதண்ட சையோக ஜன்னியம்.

ii. இரண்டாவது மூங்கிலாதி யிருதள விபாக ஜன்னியம்.

iii. மூன்றாவதோ சம்யோகத்தாலும் விபாகத்தாலும் முதற்சப்தம் ஜனித்த பின்னர் அச்சப்தத்தால் நிமித்த வாயு சகாயத்தோடு $ வீசிதரங்க நியாயத்தாலேனும் கதம்ப கோளக நியாயத்தாலேனும் உண்டாவது.

குணநிருபணம் முற்றிற்று.



$ தருக்கபரிபாஷை 251-வதுபக்கம் பார்க்க.

## 3. கரும நிருபணம்.



எழுதல், விழுதல், வளைதல், நிமிர்தல், நடத்தலெனக் கருமம் ஐவகைத்து.

எழுதற்றன்மை முதலியன ஜாதிகள்.

கர்மங்கள் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, மனங்களின்க ணிருப்பன; அவை யாவு மநித்தியமே. அதீந்திரியங்களின்க ணிருப்பன அதீந்திரியங்கள்; பிரத்தியட்சங்களின்க ணிருப்பன பிரத்தியட்சங்கள்.

¶ நோதநமெனப் பெயரிய சையோகத்தால் முதற் கிரியை யுண்டாகின்றது; இரண்டாவது முதலியன வேகத்தால் ஜனிப்பன; கிரியையானே விபாகமும், விபாகத்தானே பூர்வசையோக நாசமும், அதன்பின் உத்தரதேச சையோக வுற்பத்தியும், அதன்பின் கர்ம விபாகங்கட்கு நாசமுமாம்.

கருமநிருபணம் முற்றிற்று.



¶ தருக்கபரிபாஷை 370-வது பக்கம் பார்க்க.

## 4. சாமாநிய நிரூபணம்.



சாமாநியம்: வியாபகம், வியாப்பியம், வியாப்பிய வியாபகம் என மூவகைத்து.

i. வியாபகம் சத்தை.

ii. வியாப்பியம் கடத்தன்மை முதலியன.

iiii. வியாப்பிய வியாபகம் திரவியத் தன்மை முதலியன.

" வியக்தியின் அபேதம், துல்லியத்துவம், சங்கரம், அநவஸ்தை, சொரூபஹானி, அசம்பந்தம் என்பன சாதி பாதகங்கள். "

நித்தியமாய் அநேகத்திற் சமவேதித் திருப்பது சாமாநியத்தி னிலக்கணம். சாமாநியங்கள் நித்தியங்களே. அதீந்திரியங்களின்க ணிருப்பன அதீந்திரியங்கள். பிரத்தியட்சங்களின்க ணிருப்பன பிரத்தியட்சங்கள்.

சாமாநிய நிரூபணம் முற்றிற்று.



## 5. விசேட நிருபணம்.



விசேடங்கள் நித்தியத் திரவியங்களின்க ணிருப்பன. அவை யனேகமாய், நித்தியமாய், அதிந்திரியங்களாயிருப்பன. பிரளயத்தில் பரமாணுக்களின் பேதத்தின்பொருட்டு அவை யங்கிகரிக்கப் படுகின்றன; அவற்றிற்கு வைதர்மிய வியாப்பியத் தன்மை யுண்மையின்.

விசேட நிருபணம் முற்றிற்று.



## 6. சமவாய நிருபணம்.



சமவாயமாவது தனது சம்பந்திக்கு வேறாய் நித்தியமா யுள்ளது. அதனால் சொரூப சம்பந்தத்திற்கும், சையோக சம்பந்தத்திற்கும் † நிராசமாம். ஈண்டு "கடத்திற் கடத்தன்மை" என்னும் பிரதீதியே யதிற் பிரமாணமாம். நையாயிக மதத்திற் சமவாயம் பிரத்தியட்சம். அதுவும் ஒன்றும் நித்தியமுமாம்.

சமவாய நிருபணம் முற்றிற்று.



† நிராசம்—நீக்கம்.

அற்றேல், அந்நியங்களாகிய அந்தகாரம் சுவர்ண முதலிய திரவியங்களும், ஆலஸ்யாதி குணங்களும் இருத்தலின் ஒன்பதே, இருபத்து நான்கே யென்று கூறுவது எவ்வாறெனின், அற்றன்று; அந்தகாரம் திரவியமன்று, பின்னையோ தேஜஸின் அபாவமாம். சுவர்ணம் தேஜஸே. ஆலசியம் கிருதி (முயற்சி) யின் அபாவமேயா மாதலின்.

இங்ஙனமே ஏனையவைகளும் உணரத் தக்கன.

## 7. அபாவ நிரூபணம்.

அபாவம்: சம்சர்க்காபாவம் அந்நியோந்நியாபாவம் என இருவகைத்து.

முதலது பிராகபாவம், துவம்சம், அத்தியந்தாபாவம் என மூவகைத்து.

பிராகபாவம் விநாசியும் அஜந்நியமுமாம்.

துவம்சம் ஜன்னியமும் அவிநாசியுமாம்.

அத்தியந்தா பாவமும் அந்நியோந்நியா பாவமும் அஜன்னியமும் அவிநாசியுமாம்.

யோக்கியாநுபலத்தியால் அபாவம் பிரத்தியட்சமாம்; வேறிடத்தில் அதீந்திரியமாம்.



## பிரத்தியக்ஷ நிரூபணம்.

பிரமை கூறப்படுகின்றது. அது:—பிரத்தியட்சம், அநுமிதி, உவமிதி, சாத்தம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்து. அவற்றின் கரணங்களாகிய பிரமாணங்களும் பிரத்தியட்சம், அநுமானம், உவமானம், சத்தம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்து.

அவற்றுள், பிரத்தியட்சம் நிர்விகல்பகம், சவிகல்பகமென இருவகைத்து.

கிராணம், இரசநம், சட்சு, துவக்கு, சுரோத்திரம்,மனம் என்னு மிவ்வாறிந்திரியங்களும் பிரத்தியட்ச கரணங்களாம். இவை சம்பந்த முடையனவாகவே யிருந்து பிரத்தியட்சத்தை ஜனிப்பிக்கின்றன.

சம்பந்தமும் இலௌகிகம் அலௌகிகம் என இருவகைத்து.

அலௌகிகம் ஞான லட்சணை, சாமாநிய லட்சணை, யோகஜம் என மூவகைத்து.

இலௌகிகம்: சம்யோகம், சம்யுக்த சமவாயம், சம்யுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடணத்துவம் என அறு வகைத்து.

## இலௌகிகப் பிரத்தியட்சம்.

சையோகத்தாற் றிரவியப் பிரத்தியட்சம்.

சம்யுக்த சமவாயத்தாற் சப்த மொழிந்த குண, கர்ம, திரவியங்களின்க ணுள்ள ஜாதிகளின் பிரத்தியட்சம்.

சம்யுக்த சமவேத சமவாயத்தால் சப்தமாத்திரத்தின்க ணுள்ள சாதி யொழிந்த குணகர்மங்களின்க ணுள்ள சாதிகளின் பிரத்தியட்சம்.

சமவாயத்தால் சப்தத்திற்கும், சமவேத சமவாயத்தால் சப்தத்தின்க ணுள்ள ஜாதிகட்கும், விசேடணத்துவத்தால் அபாவத்திற்கும், சமவாயத்திற்கும் பிரத்தியட்சம்.

## அலௌகிகப் பிரத்தியட்சம்.

அஃது எங்ஙனம்: ஞான லட்சணையால் 'சுகந்த முடைத்து சந்தனம்' என்னும் சாட்சுச ஞானமுண்டாகின்றது. சாமானிய லட்சணையால் கடத்துவ வடிவத்

தால் சர்வகடஞானம். யோகஜ தர்மத்தால் யோகிகட்குச் சர்வஞானம்.

### பிரத்தியட்ச விபாகம்.

ஆண்டு நிருவிகல்பகமாவது விசேஷியப் பிரகாரரகிதமாய் வஸ்து சொரூபமாத்திர ஞானம். பிரகாரசகிதம் சவிகல்பகம். பிரகாரத் தன்மையாவது விளங்கிய வைசிட்டியப் பிரதியோகித் தன்மை. எங்ஙனம். இது கடம் என்புழி 'இது' விசேஷியம், கடத்துவம் பிரகாரம், விளங்கிய வைசிட்டியம் அவற்றின் சமவாயம், அதனது பிரதியோகி கடத்தன்மை.

விசிட்டவைசிட்டிய ஞானம் சவிகல்பகமே. எங்ஙனம்: இவன் தண்டி என்புழித் தண்டத்துவ விசிட்டத்தினது வைசிட்டியம் புருடனிடத்துப் பிரதீதியாகின்றது. முதலில் இந்திரிய சந்நிகருஷத்தால் கட கடத்துவமென்னும் நிருவிகல்பகமும், பின்னர் 'இதுகடம்' என்னும் விசிட்டஞானமு முண்டாகின்றன.



## பிராமாணியப் பிரக்கிரியை.



ஆண்டு, பிறிதாற் பிராமாணியக் கிரகண மென நையாயிகர் கூறுவர். எங்ஙனம்: முதலில் "கடம்"

என்னும் வியவசாயமும், அதன்பின் "கடத்தை யான் உணர்கின்றேன்" என்னும் அநுவியவசாயமும், அதன்பின் பிராமாணியம் அப்பிராமாணியம் என இருகோடிகளின் ஸ்மரணமும், நான்காவது இஞ்ஞானம் பிரமையா அன்று என்னும் பிராமாணிய சம்சயமும், அதன்பின் விசேஷதரிசனானந்தரம் பிராமாணியத்தின் கிரகணமும் இஞ்ஞானம் பிரமை; பிரயோஜனத்தோடு கூடிய பிரவிர்த்தி ஜனகத்தன்மை யுண்மையின்; அன்னியஞானம்போல் என்க. தன்னாற் பிராமாணியக்கிரகணமென மீமாம்சகர் மூவருங்கூறுவர். அவற்றுள், குருமதத்தில் "இது கடம்" என்னும் ஞானம் விஷயத்தையும் ஆத்மாவையும் ஞானத்தின் பிராமாணியத்தையும் கிரகிக்கின்றது. முராரிமிசிரர் மதத்தில் இது கடமென்னும் ஞானத்தின்பின் "கடத்தையா னறிகின்றேன்" என்னும் அநுவியவசாயம் உண்டாகின்றது. அதனாலேயே பிராமாணியக்கிரகணம். பட்டர்மதத்தில், எவ்வாறு ஞானத்திற்கு அதீந்திரியத்தன்மை யானே ஞானம் அநுமேயமோ அவ்வாறு அதன்கண்ணுள்ள பிராமாண்யமும் அநுமேயம். அஃதிங்ஙனமன்றோ:—"இது கடம்" என்னும் ஞானத்தின்பின் கடத்தில் ஞாதத்தன்மை உற்பத்தியாகின்றது; அதன்பின் "என்னாற்

கடமறியப்பட்டது” என்று ஞாதத்தன்மையின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. அதனால் வியாப்பிய முதலிய பிரத்தியக்ஷத்தின்பின்ஞானத்தின் அனுமானமாம். எங்ஙனம்:—நான், கடத்துவத்தைப் பிரகாரமாக வுடைய ஞானத்தை யுடையவன்; கடத்தன்மையைப் பிரகாரமாகவுடைய ஞாதத்தன்மையை யுடையவனாதலின், இம் மாத்திரத்தாலேயே அதற்குத் தர்மதர்மிகளை விஷயமாக வுடையதாந் தன்மை யானே பிராமாணியத்தின் அனுமானமாம்.

பிரத்தியக்ஷநிருபணம்
முற்றிற்று.



## அனுமான நிருபணம்.



அனுமிதியின் கரணம் அனுமானம். அனுமிதித்தன்மை ஜாதியாம். வியாபாரத்தோடுகூடிய காரணம் கரணம். வியாபாரமும்:—அதினின்றுஞ் சனித்ததாயதினின்றுஞ் சனித்ததைச் சனிப்பிப்பதாம், ஏதுவின் ஞானதி கரணமாம்; பராமரிசம் வியாபாரமாம். பராமரிசமும் வியாப்திவிசிஷ்ட பக்ஷதர்மத்வ ஞானமாம்.

எங்ஙனம்:—"வன்னி வியாப்பிய தூமமுடையது இது" என்பது முதலில் அடுக்களையாதியின்கண் தூமத்தில் வன்னியின் சாமானாதிகரண்ய கிரகணமாங்கால், தூமம் வன்னிவியாப்பியம் என்னும் அனுபவமுண்டாகிறது. அதன்பின் காலாந்தரத்தில் மலையின்கண் தூமத்தை நோக்கும்பொழுது வியாப்தியின் ஸ்மரணமுண்டாகிறது. அதன்பின் வியாப்தி விசிஷ்டவைசிஷ்டிய ஞானமாகிய "வன்னியின் வியாப்பிய தூமமுடையது இது" என்னும் மூன்றாவதாகிய லிங்கபராமரிசம் உண்டாகிறது. பக்ஷத்தன்மையோடு கூடிய அதனால் "மலை வன்னியுடையது" என்னும் அநுமிதிஞானமுண்டாகிறது.

வியாப்தியும்:—எதுவுடன் ஒரு நிலைக்களத்திருப்பதாய முழுதுமின்மையின் எதிர்மறையல்லாத சாத்யத்துட னொருநிலைக்களத்தி லிருத்தலாந் தன்மையாம். "இது, சம்யோகமுடையது, திரவியத்தன்மையால்" என்புழி அவ்வியாப்திக்குற்றந்தங்கு மென்று கூறற்க; "பிரதியோகியை வேற்று நிலைக்களத்தி லுடைத்தாயிருப்பதாயும் எதுவுடன் ஒருநிலைக்களத்திலிருப்பதாயுமுள்ள முழுது மின்மையின் எதிர்மறை யல்லாத சாத்தியத்துட னொருநிலைக்களத்தி லிருத்தலாந்தன்மை"

என்பது பொருளாகலின். பக்ஷத்தன்மையும்:—சாதிக்கும் இச்சையின்றியதோடு கூடிய சித்தியினபாவமாம்.

தன்பொருட்டெனவும் பிறர்பொருட் டெனவும் அநுமான மிருவகைத்து. அவற்றுள், பிறர் பொருட்டநுமானம் ஐந்தவயவங்களாற் சாதிக்கத்தக்கது. அவயவங்களும், பிரதிஞ்ஞை, ஏது, திருஷ்டாந்தம், உபநயம், நிகமனம். எங்ஙனம்:-(1) இது வன்னியுடையது (2) புகையுடைமையால் (3) யாது யாது புகையுடையது அது அது வன்னியுடையது. எங்ஙனம்:—அட்டில். (4) வன்னிவியாப்ய தாமமுடையது இது (5) ஆதலால் வன்னியுடையது என்பது. தன பொருட்டநு உம்:—தன்கண்ணுள்ள வியாப்தியாதி ஞானத்தாற் சாதிக்கத்தக்கது. அது பிறனுணரும் பொருட்டு அன்று. இவ்வகை சப்தப் பிரயோகம் கூறப்பட்டது.

அவ் வநுமானமும்:—கேவலான்வயி, கேவலவியதிரேகி, அன்வயவ்யதிரேகி யென மூவகைத்து. எதில் சாத்தியாபாவமானது யாண்டும் இன்றோ அது கேவலான்வயியாம். எங்ஙனம்:—கடம், அபிதேயம், பிரமேயத் தன்மையால் என்புழி அபிதேயத் தன்மையாகிய சாத்தியத்தினது அபாவம் யாண்டு மின்று,

எதில் சாத்தியத்தின் பிரசித்தி பக்ஷத்திலன்றி யன்னியத்தில் இன்றோ அது கேவல வியதிரேகி. எங்ஙனம்: பிருதிவி இதர பேத முடையது; பிருதிவித்தன்மையுண்மையால், யாண்டு இதர பேதாபாவம் உளதோ, ஆண்டுப் பிருதிவித்தன்மையி னபாவம் உளது என்பது. எங்ஙனம்:—ஜலாதிகளில் வ்யதிரேக வியாப்தியின் கண்ணே சாத்யாபாவம் வியாப்பியமாம், ஏதுவினபாவம் வியாபகமாம். எதில் சாத்யமும் சாத்யாபாவமும் வேற்றிடத்தில் பிரசித்தமோ அஃது அன்வய வ்யதிரேகியாம், எங்ஙனம்:—மலை தீயுடைத்து, புகையுடைமையால் என்பது, அன்வய வ்யதிரேகியாய ஏதுவில் அவசியம் ஐந்து ரூபங்களினது பிராப்தி அபேக்ஷிக்கத்தக்கது. பக்ஷவிருத்தித்வம், சபக்ஷசத்வம், விபக்ஷ வ்யாவிருத்தத்வம், அபாதிதத்வம், அசத்ப்ரதிபக்ஷத்வம் என ஐந்துரூபங்களாம்.

கேவலான்வயியின்கண் விபக்ஷ வியாவிருத்தத்வ ரகிதமும், கேவல வியதிரேகியின்கண் சபக்ஷ சத்வ ரகிதமும் ஆகிய நான்கு ரூபங்களே அபேக்ஷிக்கத்தக்கன. எதில் சாத்யசந்தேகமோ அது பக்ஷம். எதில் சாத்ய நிச்சயமோ அது சபக்ஷம். எதில் சாத்யாபாவ

நிச்சயமோ அது விபக்ஷம். சாத்யாபாவ முடைய பக்ஷம் பாதமாம். சாத்திய விரோதிக்குச் சாதகமான ஏது சற்பிரதிபட்சமாம். உபாதியுடையதன்கண் பக்ஷ சபக்ஷசத்வாதிகளின் ஒன்றன் அபாவம் அவசியமாம். சோபாதியும்:—சுவ வியபிசாரித்தன்மைச் சம்பந்தத்தால் உபாதி விசிட்டமாம். உபாதியும் சாதனவியாபகத்தோடு கூடிய சுத்த சாத்யவியாபகம் எனவும், சாதன வியாபகத்தோடு கூடிய பக்ஷதர்மாவச் சின்ன சாத்ய வியாபகம் எனவும், சாதன வியாபகத்தோடு கூடிய சாதனவச்சின்ன சாத்ய வியாபகம் எனவும் மூவகைத்து. முதலாவது எங்ஙனம்:—அயகோளகை தூமமுடையது, வன்னி யுடைமையால். ஈண்டு ஈரவிறகினின்று மெழுந்த வன்னி யுடைமை சாதன வியாபகத்தோடு கூடிய சுத்த சாத்ய வியாபகம் என்னும் உபாதியாம்.

இரண்டாவது:—எங்ஙனம் வாயு பிரத்தியட்சம்; பிரத்தியக்ஷ ஸ்பர்ஸாஸ்ரயத் தன்மை யுண்மையின்.'' ஈண்டுப்பாகிய திரவியத்தன்மையால் அவச்சின்னப்பிரத்தியக்ஷமாகிய சாத்தியத்திற்குவியாபகமான உத்பூதரூப முடைமை உபாதி. மூன்றுவது எங்ஙனம்: "துவம்சம் விநாசி, ஜன்னியத் தன்மை யுண்மையின்'' ஈண்டு ஜன்யத்

தன்மையா லவச்சின்ன விநாசித்வ வியாபகமான பாவத் தன்மை யுபாதி.

## ஏதுப்போலிகள் கூறப்படுகின்றன.

ஏதுப்போலிகள்:—சவ்வியபிசாரம், விருத்தம், சற்பிரதிபக்ஷம், அசித்தம், பாதிதம் என ஐவகையாம்.

### i. சவ்வியபிசாரம்.

அது சாதாரணம் அசாதாரணம் அநுபசங்காரி யென்னும் பேதத்தால் மூவகைத்து.

(1) சாத்யாபாவ மிருப்பதன்கணிருப்பது சாதாரணமாம். எங்ஙனம்:—"பர்வதம் தூமமுடையது, வன்னி யுண்மையின்."

(2) சபக்ஷங்களெல்லாவற்றினு மில்லாதிருப்பது அசாதாரணமாம். எங்ஙனம்:—"பர்வதம் அழலுடைத்து, பர்வதத்தன்மையால்."

(3) சர்வபக்ஷமுடையது அனுபசங்காரியாம். எங்ஙனம்:—" சர்வம் பிரமேயம், அபிதேயத்தன்மையால்.

### ii. விருத்தம்.

சாத்யாபாவ வியாப்தமான ஏது, விருத்தமாம் எங்ஙனம்:—"கடம் நித்தியம், சாவயவத்தன்மையால்".

### iii. சற்பிரதிபக்ஷம்.

சற்பிரதிபக்ஷம் எங்ஙனம்:—“பர்வதம் வன்னியுடைத்து; தூமமுடைமையால்”. “பர்வதம் வன்னியின் அபாவமுடைத்து, அட்டிலி னன்னியத்தன்மையால்”.

### iv. அசித்தம்.

அசித்தம்: ஆஸ்ரயாசித்தம், சொரூபாசித்தம், வியாப்பத்வாசித்தம் என மூவகைத்தாம்.

(1) எதில் பக்ஷமின்றோ அல்லது சித்தசாதனமோ அஃது ஆஸ்ரயாசித்தமாம். எங்ஙனம்:—“முயற்கொம்பு நித்தியம்; அஜன்னியத்தன்மையால்”. “சரீரம், கரசரணாதிகளோடு கூடியது, கரசரணாதிகளோடு கூடி விளங்குந் தன்மை யுண்மையால்.”

(2) எதில் பக்ஷாவிருத்தி எதுவோ அது சொரூபாசித்தமாம். எங்ஙனம்:—“மலைதீயுடைத்து, அட்டிற்றன்மையால்.” அதுவும் விசேஷணாசித்தம், விசேஷியாசித்தம், பாகாசித்தம் என்னும்பேதத்தாற் பல வகைத்தாம்.

(i) முதலாவது எங்ஙனம்:—“சப்தம் அநித்தியம், கடபுலனுக்குப் புலப்படுவதுடன் ஜன்யமாதலால்.”

(ii) இரண்டாவது எங்ஙனம்:—"சப்தம் அநித்தியம், குணமாவதுடன் பரமாணுவின்கணிருப்பதால்."

(iii) மூன்றாவது எங்ஙனம்:—"இவை திரவியங்கள், நிரவயவத்தன்மையால்".

(3) உபாதியோடுகூடியது வியாப்யத்வாசித்தமாம். எங்ஙனம்:—" பர்வதம் தூமமுடையது, வன்னியுடைமையின்."

V. பாதிதம்.

பாதிதம் எங்ஙனம்:—"மடு வன்னியுடைத்து, திரவியத்தன்மையால்".

அதனால்கூறிய தோஷமின்றிய எது நல்லஹேதுவாம் என்றிங்ஙனம் அனுமானம் விபாக்யானஞ் செய்யப்பட்டது.

அநுமான நிரூபணம் முற்றிற்று.



## உவமான நிரூபணம்.



உவமிதியினது கரணம் உவமானம். ஆமா எத்தன்மைய து என்று வினவ "ஆவினையொக்கும் ஆமா" என்று கூறுங்கால் எப்பொழுது ஆவினையொத்த பிராணியைப் பார்க்கின்றானோ அப்பொழுது முற்கூறிய வாக்கி

யார்த்தத்தை ஸ்மரிக்கின்றான்; பின்னர் "இஃது ஆமா வென்னும் பதவாச்சியமென்று சக்திஞான முண்டாம். அவ் விஃது உபமிதியாம். என்றிங்ஙனம் உவமானம் சொல்லப்பட்டது.

உவமான நிருபணம் முற்றிற்று.



## சத்த நிருபணம்.



ஆத்தனாற் கூறப்படும் வாக்கியம் பிரமாணம். பிரகிருதவாக்கியார்த்தத்தைக் கோசரிக்கும் யதார்த்த ஞான முடையவன் ஆத்தன்; பதத்தின் ஞானங் கரணம்; பதார்த்தத்தின் ‡ உபஸ்திதி வியாபாரமாம்; ஆகாங்க்ஷை, யோக்கியதை, ஆசத்தி, தாற்பரிய ஞானம் என்பவை சககாரிகள்; பலம் சப்தஞானம். சொரூபயோக்கியத்தையுடன் அஜனிதான்வயபோதகத்வம் ஆகாங்க்ஷை. ஆகலால் "கடம் செயப்படுபொருண்மை, கொண்டு வருதல் முயற்சி" என்புழி அன்வயபோதமின்று; சொரூபயோக்யத்தன்மையின்மையின். "இவன் வருகின்றான் புத்திரன் இறைவனது, புருடன் விலக்கக்கடவன்"

‡ உபஸ்திதி - நிலை (ஞானம்).

என்புழி இறைவனது புருடன் என்று அன்வயபோத மின்று; புத்திரனோடு அன்வயபோதம் ஜனித்திருத்த லின். பாதகப்பிரமையி னபாவம் யோக்கியதை. அதனால் "அழலாற்றெளிக்கின்றான்" என்புழி அன்வயபோத மின்று; அயோக்கியத்தன்மையுண்மையின். †வியவதான மின்றி அன்வயப் பிரதியோகியி னுபஸ்திதி ஆசத்தி யாம். அதனால் "மலை உண்ணப்பட்டது, வன்னியுடைத்து தேவதத்தனால்" என்புழி அன்வயபோதமின்று. அவ்வவ் வார்த்தைப் பிரதீதி யிச்சையா லறையுந்தன்மை தாற்பர்யம். அதனால் போஜனப் பிரகரணாதிகளில் "சைந்தவத்தைக் கொண்டுவா" என்று கூறின் குதிரையைக் கொண்டுவருதலாகிய போதமுண்டாவதில்லை, விருத்தியாலன்றிச் சத்தத்தா லன்வயபோத முண்டாவதில்லை.

சக்தியென்றும் இலக்ஷணையென்றும் விருத்தி யிருவகைத்தாம். சக்தி, கடாதிபதங்கட்குக் கடாதிகளில். இலக்ஷணை எங்ஙனம்:—கங்கையில்இடைச்சேரி இருக்கின்றது என்புழிக்கங்கா பதார்த்தமாகிய பிரவாகத்தில் இடைச்சேரியி னன்வயம் பொருந்தாமையின், கங்கா பதத்திற்குத் தீரத்தில்இலக்ஷணை கற்பிக்கப்படுகின்றது.

† வியவதானம் - மறைப்பு.

அவ் விருத்தியா * உபஸ்திதமான தீரத்தில் இடைச்சேரி இருக்கின்றதென்று அன்வயபோதமுண்டாகின்றது. கௌணிவிருத்தியும் இலக்ஷணையே. எங்ஙனம்:— "அக்கினிமாணாவகன், எருது வண்டி." என்று இலக்ஷணையால் அக்கினியாதி சாதிருசியம் பிரதீதியாகின்றது.

சக்தியுடைய பதம்:—யௌகிகம், ரூடம், யோகரூடம், யௌகிகரூடமென நால்வகைத்து.

முதலது எங்ஙனம்:—† பாசகாதிபதம் யோகார்த்தத்தில் பாக கர்த்தாவினிடத்திற் சக்தியையுடையது.

இரண்டாவது எங்ஙனம்:—விப்ராதிபதம் ‡ ரூடியாற் பிராஹ்மண வாசகம்.

மூன்றாவது எங்ஙனம்:—பங்கயாதிபதம் ¶ யோகரூடியால், சேற்றில் உற்பத்தி கர்த்திருத்துவத்தாலும் பத்மத்தன்மையாலும் பத்மவாசகமாம்.

நான்காவது எங்ஙனம்:—உத்பித்முதலியபதம். யௌகிகமாயின் தரு கொடி முதலியவற்றின்வாசகமும் ரூடமாயின் யாகவிசேஷத்தினுடைய வாசகமுமாம்.

---

* உபஸ்திதமான - பெறப்பட்ட. † பாசகன் - சமைப்போன். ‡ ரூடி - இடுகுறி. ¶ யோகரூடி - காரணவிடுகுறி.

இலக்ஷணை $ ஜஹத்ஸ்வார்த்தம், (†) அஜகத் () ஸ்வார்த்தம் என இருவகைத்தாம். முதலதெங்ஙனம்: "கங்கையிற் கோஷம்" என்பதாதியில். இரண்டாவ தெங்ஙனம்: 'குடைக்காரர் யாவருஞ் செல்கின்றனர்' என்பதாதியில். ஈண்டுக் குடைக்காரர்க்கும் அவரி னின்று மிதரனுக்கும் கமனான்வயமாம்.

## சாப்தபோத பிரக்கிரியை.

'தேவதத்தன் கிராமத்தையடைகின்றான்' என்புழிக் கிராம கர்மத்தையுடைய ¶ கமனஜனக வர்த்தமானக் ‡ கிருதியையுடையவன் என்பது அன்வய போதமாம். இரண்டாம்வேற்றுமைக்கருத்தம் [] கர்மத்வம், * தாது விற்குக்கமனம், ஜனகத்தன்மைசம்சர்க்கமர்யாதையாற் பெறப்பட்டது. (*) லட்டிற்குவர்த்தமானத்வம், ஆக்யா தத்திற்குக்கிருதி, அதன் சம்பந்தம் சம்சர்க்க மர்யாதை

---

$ ஜகத்-விட்ட, (†) அஜகத்-விடாத. () ஸ்வார்த்தம் - தனதர்த்தம். ¶ கமனஜனகம் - அடையுந்தொழிலை யுண்டாக்குவது. ‡ கிருதி - முயற்சி. [] கர்மத்வம் - செயப்படு பொருண்மை * தாது - பகுதி. (*) லட் - நிகழ்கால (கின்று) இடைநிலை.

யாற் பெறப்பட்டது. யாண்டுக் கர்த்தாவினிடத்தில் கிருதிக்குப் ¶பாதமோ ஆண்டு ஆக்யாதத்திற்கு வியாபாராதிகளில் இலக்கணை. எங்ஙனம்: "தேர்செல்கின்றது" என்புழி, செல்லுகையைத்தோற்றுவிக்கும் வர்த்தமான வியாபாரத்தையுடையதுதேர். "தயிர்நோக்குகின்றான்" என்பதாதியில் இரண்டாம் வேற்றுமையின்றிய விடத்திற் றயிரென்னும்சப்தமே விடாதலக்ஷணையாற் றயிரின் கர்மத்தன்மையை யறிவிக்கின்றது. † ஏகவசனுதியாற் றோற்றும் ஒருமையாதி, யாண்டும் முதல் வேற்றுமை முதலியவற்றையுடைய பதங்களைத் தோற்றுவிக்கின்றன. "தேவதத்தனால் அடையப்படுகிறது கிராமம்" என்பதற்குத் தேவதத்தன்கண்ணுள்ள கிருதி ஜன்ய கமன ஜன்ய ‡ பலசாலியது கிராமம் என்பது பொருளாம். உண்மை சம்சர்க்கபலத்தாற் பெறப்பட்டது. மூன்றும் வேற்றுமையினது அருத்தம் கிருதி, ஜன்யத்வம் சம்சர்க்கம், கமனம் தாதுவின் அருத்தம், ஜன்யத்வம் சம்சர்க்கம், பலம் $ கர்மாத்மனே பதார்த்தமாம்.

---

¶பாதம் - நீக்கம். † ஏகவசனம் - ஒருமைச்சொல். ‡ பலசாலி-பயனையுடையது. $ கர்மாத்மனேபதம்-செயப்படு பொருளை யுணர்த்துஞ் சொல்.

சாலித்வம்சம்சர்க்கம். †பாவப்பிரத்யயத்திலோ, "தேவ தத்தனுற் றூங்கப்படுகிறது" என்பதற்குத் தேவதத்தன் மாட்டுள்ள கிருதி ஜன்னியம் நித்திரையென்பது பொருள். பாவப்பிரத்யயஸ்தலத்திற் பயனின்மையின் ஆத்மனேபதத்தினதருத்தம்பிரதீதியாவதில்லை. ‡பௌஷ்யத்வம் லிருட்டினது பொருள். அதுவும் நிகழ்கின்ற முன்னின்மையின் பிரதியோகியினது தோற்றமுண்மை. அதனுல் "செல்வான்" என்புழி நிகழ்கின்ற முன்னின்மையின் பிரதியோகியினது தோற்றமுடைய கமனுனுகூலக் கிருதியையுடையவன் என்பது பொருள். அனத்யதனத்வமும் லுட்டினர்த்தமாம். (உம்மை, பவிஷ்யத்துவத்தை யுணர்த்துவதென்றுணர்க). உத்பத்தியும் $ பூதத்வமும் லுங்கினதுபொருள். பூதத்வமென்பது அதீதத்வமாம். அதுவும் உத்பத்தியி லன்வயிக்கின்றது. இங்ஙனமாக, நிகழ்கின்ற த்வம்சப் பிரதியோகியின் உத்பத்தியுண்மை பெறப்பட்டது. ¶ அனத்யத

---

† பாவப்பிரத்தியயம் - ஆத்மனேபதம்.

‡ பௌஷியத்துவம் - எதிர்காலத்தன்மை.

$ பூதத்துவம் - இறந்தகாலத்தன்மை.

¶ அத்யதனத்துவம்-முன்னிரவின் பாதியிலிருந்து வரும் இரவு பாதிவரையு முள்ளகாலம். அதனின்வேறுகிய காலம் அனத்யதனத்துவமாம்.

னத்வமும், பரோக்ஷத்வமும், அதீதத்வமும், லிட்டி னது பொருள். முன்போன்று உத்பத்தியின்கண் அத னன்வயம். அனத்யதனத்வமும் அதீதத்வமும் லங்கி னது பொருளாம். பிரயத்ன சாத்யத்தோடு கூடிய பல முடைய அனிஷ்டத்தைத் தோற்றிவைக்காத இஷ்ட சாதனத்தன்மை விதிலிங்கின்பொருள். "துறக்கவேட் கையான் வேட்க" என்பதாதியில் பிரயத்ன சாத்ய பல முடைய அநிஷ்டத்தைத் தோற்றிவைக்காத இஷ்ட சாதனமாகிய யாககர்த்தா துறக்க வேட்கையான் என் பது பொருள். சொல்பவனது இச்சையின் விஷயத் வம் ஆசீர்லிங்லோட்டினது அருத்தமாம். அதனால் "குடத்தைக்கொண்டுவா" என்புழிக் குடகர்மத்தை யுடைய எனதிச்சையின் விஷயமான கொண்டுவருத லின், அநுகூலக் கிருதியையுடையோன் நீயென் றன் வயபோதமாம். வியாப்பியக் கிரியையால் வியாபகக் கிரியையின் § ஆபாதனம் லுங்ஙின தருத்தமாம். தாற்பரிய வசத்தால் சிலவிடத்திற் பூதத்வமும் சில விடத்திற் பௌஷ்யத்வமும் லுங்ஙாற் போதிப்பிக்கப் படுகின்றன.

"சன்" என்னும் விகுதிக்குக் கருத்தாவின் இச்சை பொருளாம். சன்னுத்தர ஆக்யாதத்திற்கு ஆஸ்ரயத்

---

§ ஆபாதனம் - சம்பாதனம்

தன்மையி லிலக்ஷணை; சவிஷயமுள்ள அர்த்தத்தோடு கூடிய பிரகிருதியையுடைய ஆக்யாதத்திற்கு ஆஸ்ரயத் தன்மையில் இலக்கணைக்குக் "குடத்தையறிகின்றான்" என்பதாதியில் முடிவுமே யுண்மையின். அடிக்கடி யென்பது யங்கினது அருத்தமாம். அத்தன்மையும், அப்பொழுதுள்ள பிரகிருதியருத்த † சஜாதீய வேறு கிரியையின் நாச காலீனத்வத்தோடுகூடிய வர்த்தமானுதிக்கிருதி விஷயத்வமாம். "அடிக்கடி யடுகின்றான்" என்பதாதியில் அவ்வாறாய ‡ காலீனத் தன்மையே யங்காற் றெரிவிக்கப்படுகிறது; ஆக்யாதத்திற்குச் § சாமதல வாசகத்தன்மையுண்மையின் விசிஷ்டவாசகத்தன்மை யங்கிற்கின்று. அப்பொழுதுண்மையும் ஸ்தூலகால மாதரித்தென்க பூர்வகாலீனத்தன்மையும் கர்த்தாவும் "துவா" என்னும் பிரத்யயத்தின் பொருளாம். பூர்வத்வமும் ¶ சந்நிஹிதக் கிரியையினபேக்ஷையா னுணரத்தக்கது. அதன் பூர்வகாலீனத்வம் அதன் பிராகபாவ கால () விருத்தித்வமாம். அல்லது அதனுற்பத்திகாலத்துள்ள நாசப்பிரதியோகி காலவிருத்தித்வமாம். அதனால்

† சஜாதீயம் - தன்னினம். ‡ காலீனத்தன்மை-காலத்தினிகழுந் தன்மை. § சாமதலம் - ஈற்றிடம். ¶ சந்நிஹிதம் - சமீபம். () விருத்தித்துவம் - இருத்தற்றன்மை.

'உண்டு செல்கின்றான்" என்புழிக் கமனப்ராகபாவாவச் சின்ன காலத்திலுள்ளபோஜன கர்த்தாவின் அபின்னன் செல்கின்றான் என்பதுபொருள்; சமானவிபக்திக் கிருதி கட்கு அபேதத்தாற்றர்மிவாசகத்தன்மையுண்மையின். அவ்யயத்தன்மையால், துவாவின் † பரத்துள்ள வேற்றுமை லோபத்தால், தாற்பரிய வசத்தால் வியவகித அவ்வியவகித சாதாரணம் காலம் என்றுணரத்தக்கது. அதனால் "முன்வருடத்திற் சென்று இவ்வருடத்தில் வந்தனன்" என்னும் இவ்வாறுயபிரயோகத்தின் பொருத்தம் உளதாம். இச்சையுடையவன் என்பது துமுன் என்னும் பிரத்யயத்தின் பொருளாம். "உண்ணச்செல்கின்றான்" என்பதற்குப் போஜன இச்சையுடையவன் செல்கின்றானென்பது பொருள்.

"உண்ண இச்சிக்கின்றான்" என்புழியோ கருத்தாவின்கண் இலக்கணை. போஜன கர்த்தாவாகிய தன்னை யிச்சிக்கின்றான் என்பது பொருள். "சவிசேஷணத்திலோ" என்னும் நியாயத்தால் விசேஷணமாகிய கிருதியில் இச்சையின் அன்வயமாம்.

பிரகிருத தாதுவினருத்தகருத்தா, சதிர்சானச் சுக்கட்டும், தாதுவினருத்தத்தாற் றோற்றிய பலத்

† பரம்-பின்.

தையுடையவன், கர்மசானச்சுவிற்கும் பொருள். சதிராதிகட்கு வாச்சியம் கருத்தா சவிஷயார்த்தத்தோடு கூடிய பிரகிருதியை யுடையவற்றின் ஆஸ்ரயத்வத்தில் லக்ஷணை. இவ்வாறே கருத்தா கருமக் கிருதுகட்கு அவ்வவ்வுருவத்தால் கருத்தாவுங் கருமமும்வாச்சியம். பாவக் கிருத்துகளாகிய நங்களுாதிகட்கோ பிரயோக சாதுத்வமாத்திரம்; தாதுவி னருத்தத்தினு மன்னியத்திற்குப் பாவக்கிருத்தாற் றோற்றிவைக்காமையின். அற்றேல் "நீலத்தைக் குடத்தைக் கொண்டுவா" என்பதாதியில், இரண்டாம் வேற்றுமை இருமுறை கேட்கப்படுதலின் செயப்படுபொரு ளிரண்டி னுணர்ச்சியினடைவுண்டாம்; விசிட்டத்திற்குச் செயப்படு பொருண்மையோ வின்றாமெனின், அற்றன்று; ஈண்டு விசேஷணத்தில் வேற்றுமை சாதுத்தன்மையின் பொருட்டாம், அல்லது விசேஷணத்தின்கண்ணுள்ள வேற்றுமைக்கு அபேதம் பொருளாம்.

ஈண்டு இதுவிசேடம்:—இரண்டாவது பக்ஷத்தில் வாக்கிய † சமாசங்கட்குப் பர்யாயத்வம் பொருந்துகின்றதின்று. வாக்கியத்தில் "நீலத்தைக் குடத்தை" என்பதாதியில் அபேதத்திற்குப் பதார்த்தத் தன்மை

† சமாசம் - தொகை.

யானே பிரகாரத்தன்மை யுண்மையின் சம்சர்க்கத் தன்மை யின்று; "நீலக்குடத்தை" என்பதாதியில் பண்புத் தொகையில் இலக்ஷணையினது அஸ்வீகாரத்தால் அபேதத்திற்கு அபதார்த்தத்தன்மையுண்மையால் சம்சர்க்கத்தன்மை யுண்மையின். அங்ஙனமாக, வாக்கிய சமாசங்கட்குப் † பரியாயானுரோதத்தால் ஆறும் வேற்றுமைத் தொகையில் "ராஜபுருஷன்" என்பதாதியில் ஆறும் வேற்றுமையி னர்த்த சம்பந்தத்தி லிலக்ஷணை பொருந்துகின்றதின்று. சம்பந்தத்திற்குச் சம்சர்க்க மரியாதையாற் பெறப்படுந் தன்மையின்மையின் உண்மையாய் விருத்தவிபக்தி ‡ அனவருத்தத்திற்கு அபேத போதக விற்பத்தியால் முக்கியார்த்த ராஜாபேதத்தினது பாதத்தால் ராஜபதத்திற்கு ராஜசம்பந்தியில் லக்ஷணை. இவ்வாறே அன்மொழித் தொகையில் கடைப்பதத்திற்கு வேறு பதார்த்தத்தில் இலக்ஷணை. அங்ஙனமாக, உம்மைத்தொகை பண்புத்தொகையொழித்தொழிந்த தொகையில் யாண்டும் அவ்வவ் வார்த்தத்தின்கண் ணிலக்ஷணை. இவ்வாறே, இன்மை நஞ்ஞினது அருத்தமாம். "குடமில்லது பூதலம்" என்ப

† பரியாயானு ரோதத்தால் - பரியாய (பதத்) தின் அனுகூலத்தால். ‡ அனவருத்தம் - தடையற்றது.

தாதியில் குடபின்னத்தி லிலக்ஷணை. "கலஞ்சத்தைத புண்ணாற்க" என்பதாதியில் பலமுடைய அனிஷ்ட ஜனகத்தி லிலக்ஷணை. கிரியையோடு கூடிய தோற்றத்திற்கு முழுது மியைபின்மை நீக்குதல் பொருளாம். எங்ஙனம்: "நீலம் தாமரை பவிக்கின்றதுவே" என்பது விசேஷணத்தோடுகூடிய தோற்றத்திற்குஇயைபின்மையை நீக்குதல் பொருளாம். எங்ஙனம்: "சங்கு வெண்மையே" என்பது. விசேஷ்யத்தோடு கூடிய தோற்றத்திற்குப் பிறிதினியையு நீக்குதல் பொருளாம். எங்ஙனம்: "பார்த்தனே தனுத்தரித்தோன்" என்பதாதியில். இக்நெறியானே யாண்டு முணரத்தக்கது.

சுபம்! சுபம்!! சுபம்!!.

சத்த நிரூபணம் முற்றிற்று.



ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி சுவாமிகளவர்கள்

சம்ஸ்கிருதத்திற் றிருவாய் மலர்ந்தருளிய

# பிரஸ்தானபேதம்.



இது:

ஸ்ரீகோவிலூர் மடாலயாதிபதியாய் வீற்றிருந்த

இருக்கை ராண்டவர் என்னும்

ஸ்ரீவீரசேகர ஞானதேசிகர் பாதசேகரராகிய

ஸ்ரீசுப்பையசுவாமிக ளவர்களால்

தமிழில் வசனவடிவமாக மொழிபெயர்க்கப் பட்டு,



சென்னை:

ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்

கோ. வடிவேலு செட்டியா ரவர்களாலும்,

மங்கலம் - சண்முக முதலியா ரவர்களாலும்,



சென்னை, கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதாநந்த அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1912.







# முகவுரை.



பரம கருணாநிதி யாகிய ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி ஸ்வாமிகள் வித்வான்களாகிய முமுட்சுக்க ளெளிதி லுணருமாறு அத்வைதஸித்தி சம்க்ஷேபசாரீரக வ்யாக்யானம், பகவற்கீதா கூடார்த்த தீபிகை முதலிய கிரந்தங்களும் எளிதி லுணருமாறு ஸித்தாந்தபிந்து, வேதாந்த கற்பலதிகை, ஆனந்த மந்தாகினி, பக்திரசாயனம், சிவமஹிம்ந ஸ்தோத்திர வ்யாக்யானம் முதலிய கிரந்தங்களும் இயற்றியருளி யிருக்கின்றனரென்பது பிரசித்தம்; அவற்றுள், சிவமஹிம்ந ஸ்தோத்திரத்தின் ஏழாவது ஸ்லோகத்தின்கண் ணுள்ள த்ரயி என்னும் பதோப லக்ஷணமாகச் சர்வப்பிரஸ்தான பேதங்களையுந் தெரிவிக்கும் விரிவாய வியாக்யானம் செய்தருளி யிருக்கின்றார். இந்தப் பிரஸ்தான பேதமென்னும் நூற்கும் அவ்வேழாவது ஸ்லோகத்தின் முதற்பதோப லக்ஷிதவியாக்யானத்திற்கும் சிறிதேனும் அக்ஷரபேதங் காணப்படாமையின், பிற்காலத்தில் ஷை ஸ்வாமிகளே முமுட்சுக்கள்

அதைத் தனியே யுணருமாறு தனிக்கிரந்தமாகஎடுத்து வைத் தருளினாரென்று தெரிகின்றது. சர்வ சாஸ்திரங் களையு முணர்த்தும் இவ்வரிய நூல் தேவவாணியிலிருப் பதால் அவ்வமரர்வாணி யுணராத தமிழ் மக்கள் எளிதி லுணருமாறு அது ஸ்ரீகோவிலூர் மடாலயாதி பதியாய் வீற்றிருந்த திருக்களராண்டவர் என்னும் ஸ்ரீவீரசேகர ஞானதேசிகர் பாதசேகரராகிய ஸ்ரீ சுப்பையசுவாமிக ளாற் றமிழில் வசன வடிவமாக மொழி பெயர்க்கப் பட்டது.







ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

# பிரஸ்தானபேதம்.

---

வானமிவ் வுலகெலா மறிவிற் ஷேற்றலாற்
கானலி னீரெனக் கருது வாயென
ஞானநற் குரவனாய் நவிலு மாமத
ஞனவின் கயமுக னடிகள் போற்றுவாம்.



சர்வ சாஸ்திரங்கட்கும் சாக்ஷாத்தாகவேனும் பரம்பரையாகவேனும் பகவானிடத்திலேயே தாற்பரி யம் என, அவற்றின் பிரஸ்தான பேதம் ஈண்டுத் தொகுத்துக் கூறப்படுகின்றது.

அங்ஙனமன்றோ, இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம்என வேதங்கள்நான்காம். சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், சந்தசு, சோதிடம் என வேதத்தினங்கங்கள் ஆறும். புராணம், நியாயம், மீமாம்சை, தர்மசாஸ்திரம் என உபாங்கங்கள் நான்காம். ஈண்டு உபபுராணங்களுக்குப் புராணத்தி லடக்கம்; வைசேஷிக சாஸ்திரத்திற்கு நியாயத்தி லடக்கம்; வேதாந்த சாஸ்திரத்திற்கு மீமாம்சையி லடக்கம்; மகாபாரத ராமாயணங்களுக்கும் சாங்கிய பாதஞ்சல பாசுபத வைஷ்ணவாதிகளுக்கும் தர்ம சாஸ்திரத்தி லடக்கம் என ஒருங்கு சேர்ந்து பதினான்கு வித்தைகளாம்.

"புராணம், நியாயம், மீமாம்சை, தர்மசாஸ்திரம், அங்கங்களோடு கூடிய வேதங்கள், வித்தைகட்கும் தர்மத்திற்கும் பதினான்கு ஸ்தானங்கள்" (1-3) என்று யாஞ்ஞவற்கியரால் கூறப்பட்டுளது.

இவையே உபவேதங்கள் நான்கோடுங் கூடிப் பதினெட்டென்று விளங்குகின்றன. ஆயுள்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த வேதம் (சாஸ்திரம்) என உபவேதங்கள் நான்காம். சகல ஆஸ்திகர்கட்கும் இவ்வளவினவே சாஸ்திரப் பிரஸ்தானங்களாம்; அன்

ணிய ஏகதேசிகளின் பிரஸ்தானங்களும் இவற்றிலேயே அடக்கமாதலின்.

அவ்வாறுயின், நாஸ்திகர்கட்கும் வெவ்வேறு பிரஸ்தானங்கள் உள. அவை இவற்றுள் அடங்காவாகலின், தனிமையாக எண்ணிக்கை செய்ய யோக்கியங்களாம்.

அங்ஙனமன்றோ, சூனியவாதத்தாலொரு பிரஸ்தானம் மாத்யமிகர்கட்கு, க்ஷணிக விஞ்ஞானமாத்திர வாதத்தால் மற்றொரு பிரஸ்தானம் யோகாசாரர்கட்கு, ஞானகார அனுமேய க்ஷணிக பாகியார்த்த வாதத்தால் வேறொருபிரஸ்தானம் சௌத்திராந்திகர்கட்கு, பிரத்யக்ஷ சலக்ஷண க்ஷணிக பாகியார்த்த வாதத்தால் மற்றொரு பிரஸ்தானம் வைபாஷிகர்கட்கு. இவ்வாறு சௌகதர்கட்கு நான்கு பிரஸ்தானங்கள்.

அவ்வாறே தேகாத்மவாதத்தால் ஒரு பிரஸ்தானம் சார்வாகர்கட்கு, இவ்வாறே தேகத்திற்கு வேறய்த் தேகபரிமாண ஆத்மவாதத்தால் மற்றொருபிரஸ்தானம் திகம்பரர்கட்கு ஆம். இந்தப்பிரகாரம் ஒருங்குசேர்த்து நாஸ்திகர்கட்கு ஆறு பிரஸ்தானங்கள் உளவே, அவை ஏன் கூறப்படவில்லை எனின்,

உண்மையே, அவற்றிற்கு வேத பாகியத்தன்மை யுண்மையின் மிலேச்சர்கள் பிரஸ்தானங்கள்போற் பரம்பரை யாகவேனும் புருஷார்த்தத்திற்கு உபயோக மில்லாமையின், அவை உபேக்ஷிக்கத் தக்கனவே. ஈண்டுச் சாக்ஷாத்தாகவேனும் பரம்பரை யாகவேனும் புருஷார்த்த உபயோகியாய் வேதோபகரணங்களாய பிரஸ்தானங்களின் பேதமேதரிசிப்பிக்கப் பட்டது.

ஆதலின், குறைவென்னும் ஆசங்கைக் கிடமேயின்று. பாலர்களுடைய வியுத்பத்தியின் பொருட்டுச் சுருக்கமாக இந்தப் பிரஸ்தானங்களின் ஸ்வரூபபேத ஏதுப் பிரயோஜனங்களின் பேதம் கூறப் படுகிறது. ஆண்டுத்தருமத்தையும் பிரஹ்மத்தையும் பிரதிபாதிப்பதாயும் அபௌருஷேயமாயும் பிரமாணவாக்கியமாயும் இருப்பது வேதம். அதுவும் மந்திரப் பிராஹ்மண வடிவினதாம்.

ஆண்டு அனுஷ்டான காரண பூதமாய திரவிய தேவதைகளைப் பிரகாசிப்பன மந்திரங்கள். அவையும், இருக்கு, யசுர், சாம பேதத்தால் மூவகையினவாம். ஆண்டு, பாதங்களாற் கட்டப்பட்ட காயத்ரியாதிச் சந்த விசிஷ்டங்கள், இருக்குகள்; “ அக்னிமீளே புரோ

ஹிதம்" என்றற்றொடக்கத்தனவாம். கீதவிசிஷ்டங்களாய அவையே சாமங்கள். அவ்விரண்டினும் வேறாயவை யசுர்க்கள். "அக்னீத் அக்னீன் விஹர" என்றற்றொடக்கத்துச் சம்போதன (விளி) ரூபங்களாய மந்திரங்களும் நிகதமந்திரங்களும் யசுரிலடங்கினவே. இவ்வாறு மந்திரங்கள் நிரூபிக்கப்பட்டன.

பிராஹ்மணமும், விதிவடிவம், அர்த்தவாத வடிவம், அவ்விரண்டின் வேறாயது என மூவகைத்து. ஆண்டுப் பாட்டர்கள் சப்த பாவனையை விதி யென்பர். பிராபாகரர்கள் நியோகத்தை விதி யென்பர். தார்க்கிகாதியர் இஷ்ட சாதனத் தன்மையை விதி யென்பர். சர்வ விதிகளும் உற்பத்தி அதிகாரம் விநியோகம் பிரயோகம் என்னும் பேதத்தால் நான்குவகையேயாம். ஆண்டு, தேவதைகர்மங்களின்வடிவமாத்திரத்தைப்போதிப்பிக்கும்விதி உற்பத்திவிதி. "அக்கினி சம்பந்தமான எட்டுக்கபாலமிருக்கிறது" என்பதாதி. இவ்வாறு செய்யத்தக்கது என்பதோடு கூடிய காரணமாகிய யாகாதிகட்குப் பல சம்பந்தத்தைப் போதிப்பிக்கும்விதி அதிகார விதியாம். "தர்சபூர்ண மாசங்களால் சுறக்க காமன் வேட்கக் கடவன்" என்பதாதி, அங்கசம்பந்தத்தைப் போதிப்பிக்கும் விதி விநியோக விதி. "தெற்

களால் வேட்கக்கடவன்" சமித்தால் வேட்கின்றான்" என்றற்றொடக்கத்தன; அங்கசகிதப் பிரதானகர்மப்பிரயோக ஐக்கியத்தைப் போதிப்பிக்கும் முன்னைய மூவிதியின் சேர்க்கை வடிவமாயவிதி பிரயோக விதி.

அதுவும்:—ஸ்ரௌதம் என்றொன்றும் கர்ப்பயம் என்றுமற்றொன்றுமாம். கர்மஸ்வரூபமும்: குணகர்மமும் அர்த்தகர்மமும் என இருவகைத்து. ஆண்டுக் கிருது காரகங்களை யாசரித்து விதிக்கப்பட்டது குணகர்மம். அதுவும் உற்பத்தி ஆப்தி விகிருதி சம்ஸ்கிருதி யென்னும் பேதத்தால் நால்வகைத்து. ஆண்டு, "வசந்தத்தில் பிராஹ்மணன் அக்கினியை ஸ்தாபிக்கக்கடவன்." "யூபத்தைச் செதுக்குகின்றான்" என்றற்றொடக்கத்தனவற்றுள், ஸ்தாபனம் செதுக்குதல் முதலியவற்றால் சம்ஸ்கார விசேஷ விசிஷ்ட அக்கினி யூபாதிகட்கு உற்பத்தி. "சுவாத்யாய மத்யயனம் செய்யவேண்டும்". "பசுவினின்றும் பாலைக்கறக்கின்றான்" என்றற்றொடக்கத்தனவற்றுள் அத்யயனம் கறத்தல் முதலிய வற்றால் இருப்பதாகிய சுவாத்தியாயம் பால் முதலானவற்றிற்கே பிராப்தி (அடைவு). "சோமத்தைப் பிழிகின்றான்" "நெற்களைக் குத்துகின்றான்" "நெய்யை விலாபிக்

கின்றான்" என்றற்றொடக்கத்தனவற்றுள் பிழிதல் குத்தல் விலாபித்தல் முதலியவற்றால் சோமாதிகளினது விகாரமாம். "நெற்களைப் புரோக்ஷிக்கின்றான்" "பத்தினி பார்க்கின்றாள்" என்பதாதியில் புரோக்ஷணை அவேக்ஷணாதியால் நெல்முதலிய திரவியங்கட்குச் சம்ஸ்காரம். இந்நான்கு மங்கமே. அவ்வாறே கிருது காரகங்களை யாசிரித்து விதிக்கப்பட்ட ஆர்த்தகர்மம் அங்கம்எனவும் பிரதானம் எனவும் இருவகைத்து. அன்யார்த்தமாவது அங்கம், அனன்யார்த்தமாவது பிரதானம். அங்கமும், சந்நிபத்யோப காரகமெனவும் ஆராதுப காரகமெனவும் இருவிதமாம். அவற்றுள், பிரதானஸ்வரூப நிர்வாஹஞ்செய்வது முதலது; பலோபகாரியாவது இரண்டாவது. இவ்வாறே சம்பூர்ண அங்கசகித விதி பிரகிருதியாம். குறைந்த அங்கத்தோடு கூடிய விதி விகிருதி. இவ்விரண்டின் வேறாயவிதி தர்விஹோமமாம். இவ்வாறே மற்றது மூகித்துக்கொள்ளத் தக்கது. இவ்வாறு விதிபாகம் நிரூபிக்கப்பட்டது.

பிராமாஸ்த்யம் நிந்தை என்னும் இரண்டனுள் ஒன்றில் இலக்ஷணையால் விதி விசேஷ வடிவமாய வாக்கியம் அர்த்தவாதமாம். அதுவும்:—குணவாதம், அனுவாதம், பூதார்த்தவாதம்என மூவகைத்து. அவற்றுள், வேறுபிர

மாணங்களுக்கு விருத்தமாய அர்த்தத்தைப் போதிப்பது குணவாதம். “ஆதித்தன்யூபம்” என்பதாதி. வேறு பிரமாணத்தாற் பிராப்தமான அர்த்தத்தைப் போதிப்பது அனுவாதம். “அக்கினி இமத்திற்கு மருந்து” என்பதாதி. வேறு பிரமாணத்தால் விரோதமும் அதனாற் பிராப்தியும் இன்றி அருத்தத்தைப் போதிப்பது பூதார்த்தவாதம்; “இந்திரன் விருத்திரன் பொருட்டு வஜ்ஜிரத்தை எவினான்” என்பதாதி. “விரோதமாங்கால் குணவாதமாம்; நிச்சயமாங்கால் அனுவாதமாம்; அவ்விரண்டு மின்மையாற் பூதார்த்த வாதமாமென்று அர்த்தவாதம் மூவிதமாகச் சம்மதம்” என்றுகூறப்பட் டிருக்கிறது. ஆண்டு, மூவித அர்த்தவாதங்கட்கும் விதி ஸ்துதி பரத்வம் சமானமாயினும், பூதார்த்தவாதத்திற்குத் தேவதா அதிகரண நியாயத்தால் தனதர்த்தத்திலும் பிராமாணியம் உண்டு. பாதிக்கப்படாததாயும் அறியப்படாததாயுமுள்ள அர்த்தத்தை யறிவிக்குந்தன்மை பிராமாணியமாம். அதுவும், பாதிக்கப்பட்ட அறியப்பட்ட விடயங்களோடு கூடியிருத்தலால் குணவாத அனுவாதங்களில் இன்று. தனதர்த்தத்தில் தாற்பரியமின்றியதாயினும் பூதார்த்த வாதத்திற்குச் சுபாவ

மாகிய பிராமாணியங் கெடுவதில்லை. இவ்வாறு அர்த்த வாதயாகம் நிரூபிக்கப் பட்டது.

அர்த்தவாதம் விதிபாகம் என்னும் இரண்டினும் விலக்ஷணமாயது வேதாந்த வாக்கியம். அதுவும்அறியாததை அறிவிப்பினும் அனுஷ்டானத்தைப் பிரதிபாதியாமையின்விதியன்று. தன்றாற் புருடார்த்த பரமாநந்த ஞானவடிவமான பிரஹ்மமாகிய சுவார்த்தத்தின்கண் உபக்கிரம உபசங்காராதி ஆறுவித தாற்பர்ய லிங்கமுடைமையானே தன்றாற் பிரமாண பூதமாய சர்வவிதிகளையும்அந்தக்கரண சுத்தி வாயிலாகத் தனக்கு அங்கமாகச்செய்துகொண்டுஅன்னியத்திற்குத்தான் அங்கமாகாமையால் அர்த்தவாதமன்று. ஆதலால்இவ்விரண்டன் வேறதே வேதாந்த வாக்கியம். அதுவும் சிலவிடத்தில் அறியாததை அறிவிக்கு மாத்திரத்தால் விதியென்று உபதேசிக்கப்படுகின்றது. விதிபத மின்றேனும் பிரமாண வாக்கியத்தன்மை யுண்மையாலேயே சில்விடத்துப் பூதார்த்தவாதமென்று வியவகரிக்கப்படுகின்றது எனத் தோஷமின்று. இங்ஙனம் பிராஹ்மணமும் மூவகைத்தென நிரூபிக்கப்பட்டது.

இவ்வாறு கர்ம காண்ட பிரஹ்ம காண்ட வடிவமான வேதம் தர்மார்த்த காம மோக்ஷ ஏது

வாம். அதுவும் முப்பிரயோகத்தால் யாக நிர்வாகத்தின்பொருட்டு இருக்கு யசுர் சாமபேதத்தால் பின்னமாம். ஆண்டு இருக்குவேதத்தால் ஹோதாவின் சம்பந்தமான பிரயோகமும், யசுர்வேதத்தால் அத்வர்யு சம்பந்தமான பிரயோகமும், சாமவேதத்தால் உத்காதாவின் சம்பந்தமான பிரயோகமும் ஆம். பிரஹ்மா சம்பந்தமான பிரயோகங்களும் யஜமான சம்பந்தமான பிரயோகங்களும் இதிலேயே அடக்கமாம். அதர்வண வேதமோ யாகத்தில் உபயோகப்படாவிடினும் சாந்திக பௌஷ்டிக அபிசாரிகாதி கர்மப்பிரதிபாதகத் தன்மையானே அத்யந்த விலக்ஷணமேயாம். இங்ஙனம், பிரவசனபேதத்தால் வேதந்தோறும் பின்னமாய அநந்த சாகைகள் உள. இவ்வாறே, கர்மகாண்டத்தில் சகல வேத சாகைகளுக்கும் வியாபாரபேத மிருப்பினும் பிரஹ்மகாண்டத்தில் ஏக ரூபத்வமேயாம் எனப் பிரயோஜன பேதத்தால் நான்கு வேதங்கட்கும் பேதம் கூறப்பட்டது.

அங்கங்களுக்குப் பிரயோஜனங் கூறப்படுகிறது:—ஆண்டு, உதாத்த அநுதாத்த ஸ்வரித ஹ்ரஸ்வ தீர்க்க புலுதாதி விசிஷ்டமாய உயிர் மெய்வடிவ வர்ண

உச்சாரண விசேஷ ஞானம் சிக்ஷைக்குப் பிரயோசனமாம். அஃதின்றேல், மந்திரங்கட்கு அனர்த்தகத்தன்மை யுண்மையின், அங்ஙனமே "ஸ்வரத்தாலும் வர்ணத்தாலு மீனமான மந்திரமானது மித்தியா ப்ரயுக்தமாய் அவ்வர்த்தத்தைக் கூறுவதில்லை. அவ்வாக்கான வஜ்ஜிரமானது யஜமானனைக் கொல்லுகின்றது. எங்ஙனம், ஸ்வரத்தினது அபராதத்தால் "இந்திரசத்ரு" என்று (சிக்ஷை 52) சொல்லப்பட்டிருக்கிறது. ஆண்டுச் சிக்ஷை சர்வவேத சாதாரணமாம். "இனிச் சிக்ஷையை இயம்புகின்றேன்" என்றற்றொடக்கத்தன † பஞ்சகண்டவடிவமாகப் பாணினியாற் பிரகாசிப்பிக்கப் பட்டன. வேத சாகை தோறும் பின்னரூபங்களாய்ப் பிராதி சாக்யமெனப் பெயரியவைகள் அன்னிய முனிகளாலேயே தரிசிப்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்தப்பிரகாரம், வைதிகபதசாதுத்வஞானத்தால் ஊகாதிகள் வியாகரணத்திற்குப்பிரயோஜனமாம். அதுவும் "வ்ருத்திராதைச்" என்றற்றொடக்கத்து எட்டு அத்யாய வடிவமாக மஹேஸ்வரப் பிரசாதத்தால் பகவானாகிய பாணினி முனிவராலேயே பிரகாசிப்பிக்கப்பட்டது. ஆண்டு, காத்யாயன முனிவரால் பாணி

---

† நவகண்டமென்றும் பாடமுண்டு.

னீய சூத்திரத்தின்மேல் வார்த்திகம் செய்யப்பட்டது. அதுபோல் வார்த்திகத்தின் பேரிலும் பகவானுகிய பதஞ்சலிமுனிவராலும் மகாபாஷ்யம் செய்யப்பட்டது. அந்த இம் மும்முனி யிலக்கணம் வேதாங்கமாம், மாஹேஸ்வரமென்று சொல்லப்படுகிறது. கௌமாராதி வியாகரணங்களோ வேதாங்கங்களன்று; மற்றே, லௌகிகப்பிரயோக மாத்திர ஞானத்தின் பொருட்டாவனவென் றறியத்தக்கனவாம். இந்தப்பிரகாரம் சிக்ஷை வியாகரணங்களால் வர்ணோச்சாரணமும் பத சாதுத்வமும் அறிந்தபொழுது வைதிக மந்திர பதங்களினது அர்த்தஞானவேட்கையுண்டாயின், அதன்பொருட்டுப் பகவானுகிய யாஸ்கரால் "சமாம்நாயঃ சமாம்நாதঃ (அது வியாக்யானம் செய்யத்தக்கது)" என்றற்றொடக்கத்துப் பதின்மூன்றத்தியாய வடிவமாக நிருக்தம் செய்யப்பட்டது; ஆண்டும் (அதன்கண்ணும்) நாமம், ஆக்யாதம், நிபாதம், உபசர்க்கம் என்னும் பேதத்தால் நான்குவிதப் பதசமுதாயத்தை நிரூபித்து வைதிக மந்திரங்களினது பதங்களினர்த்தங்கள் தரிசிப்பிக்கப்பட்டன. மந்திரங்கட்கும் அனுஷ்டேயார்த்தப் பிரகாசவாயிலாகவே காணத்தன்மை யுண்மையின் வாக்கியார்த்த ஞானத்திற்குப் பதார்த்த ஞானதீனத்தன்மை

யுண்மையானும், மந்திரத்திலுள்ள பதார்த்த ஞானத்தின்பொருட்டு நிருக்தம் அவசியம் அபேக்ஷிக்கப்பட்டதாம்; அன்றேல், அனுஷ்டான சம்பவமின்மையின்; "ஸ்ருண்யேவ ஜர்ப்பரீ துர்ப்பரீ தான" என்றற்றொடக்கத்து அதிதுக்கத்தாலும் ஊகிக்கத்தகாதனவானவற்றிற்குப் பிரகாராந்தரத்தால் (வேறுவகையால்) அர்த்தஞானத்தினது சம்பவமின்மையான். இங்ஙனம், வைதிகத்திரவ்ய தேவதாத்மகபதார்த்த பர்யாயசப்த வடிவமான நிகண்டு முதலியனவும் நிருக்தத்தின்கண் அடங்கினவையேயாம். அதனினும், ஐந்து அத்தியாய வடிவமாய் நிகண்டென்னும் பெயரிய கிரந்தமானது பகவானாகிய யாஸ்கராலேயே செய்யப்பட்டது. அமரஹேமச்சந்த்ராதியராற் செய்யப்பட்ட அன்னிய சர்வகோசங்களும் நிகண்டு ரூபத்தன்மையானே நிருக்தத்தில் அடங்கினவையென்று காணத்தக்கது. இங்ஙனம், இருக்குமந்திரங்கட்குப் பாதபத்த சந்தவிசேஷ விசிஷ்டத்தன்மை யுண்மையின், அதனை யறியாவிடின் நிந்தையின் சிரவணத்தானும், சந்த விசேஷ நிமித்த அனுஷ்டான விசேஷத்தானும், சந்தஞான வேட்கை உண்டாயின் அது பிரகாசிக்கும் பொருட்டு "கௌஸ்ரீஸ்த்ரீம்" என்றற்றொடக்கத்து அஷ்டாத்யாய வடிவமான சந்தவிசிதி பகவானு

கிய பிங்கல நாகத்தாற் செய்யப்பட்டது. அவற்றுள், "அதலௌகிகம்" என்பதீறாய மூன்றத்தியாயத்தால் காயத்திரி, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதி, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என ஏழு உட்பிரிவுகளோடு கூடிய சர்வசந்தங்களும் பிரசங்கத்தா னிரூபிக்கப் பட்டன. "அதலௌகிகம்" என ஆரம்பித்து ஐந்து அத்யாயங்களாற் புராண இதிகாசாதிகளிற் பயன்படும் லௌகிக சந்தங்கள் பிரசங்கத்தால் நிரூபிக்கப்பட்டன; வியாகரணத்தில் லௌகிகபத நிரூபணம் போல. இந்தப்பிரகாரம், வைதிக கர்மாங்கமாய தர்ஸாதி காலஞானத்தின் பொருட்டுச் சோதிடம் பகவானாகிய ஆதித்தனாலும் கர்க்காதிகளாலும் பலவிதமாகச் செய்யப்பட்டுளது. இவ்வாறே சாகாந்தரீய குணோபசங்காரத்தால்வைதிக அனுஷ்டானக்கிரம விசேஷ ஞானத்தின் பொருட்டுக் கற்ப சூத்திரங்கள் (செய்யப்பட்டன): அவையும் பிரயோகபேதத்தால் மூவிதமாம். அவற்றுள், ஹௌத்ரப் பிரயோகப்பிரதிபாதகங்கள், ஆஸ்வலாயன சாங்காயனாதிகளாற் செய்யப்பட்டன. ஆத்வர்யவப் பிரயோகப் பிரதிபாதகங்கள், பௌத்தாயன, ஆபஸ்தம்ப காத்யாயனாதிகளாற் செய்யப்பட்டன. ஔத்காத்ரப் பிரயோகப்

பிரதிபாதகங்கள் * லாட்யாயன திராஹ்வ்யாய ஞாதிக ளாற் செய்யப்பட்டன. இவ்வாறு ஆறு அங்கங்களின் பிரயோஜன பேதம் நிரூபிக்கப்பட்டது.

நான்கு உபாங்கங்களுக்குப் பிரயோஜனம் இப் பொழுது சொல்லப்படும். அவற்றுள், சர்க்கம், பிரதி சர்க்கம், வம்சம், மன்வந்தரம், வம்சானுசரிதம் என்னு மிவற்றைப் பிரதிபாதிப்பனவான புராணங்கள் பகவா னாகிய வாதராயண முனிவரால் செய்யப்பட்டன.

அவையும், ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக் நேயம், பவிஷ்யம், ப்ரஹ்மவைவர்த்தம், லிங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமநம், கௌர்மம், மாத்ஸ் யம், காருடம், ப்ரஹ்மாண்டம் எனப் பதினெட்டாம். "வேதவித்துக்களிற்சிறந்தோர்களே! முதலாவதுசனற் குமாரராற் செய்யப்பட்டது, இரண்டாவது நாரசிம்மம் என்னும் பெயரது, மூன்றாவது நாந்தமேயாம், நான்கா வது சிவதர்மம் என்னும் பெயரது, ஐந்தாவது தௌர் வாசம் என்றறிவர், ஆறாவது நாரதீயமெனப் பெயரி

---

* லாஹ்யாயண, த்ராஹ்யாயண அல்லது வ்ரீஹ்யாயண, என்றும் பாடம்;

யது, காபிலம் ஏழாவதென்றறிவர், எட்டாவது மானவம் எனச்சொல்லப்பட்டது, ஒன்பதாவது உசனுவாற் சொல்லப்பட்டது, பத்தாவது பிரஹ்மாண்டமெனப் பெயரியது, பதினொன்றாவது வாருணமெனப் பெயரியது, பன்னிரண்டாவது காலி (காளி) புராணமெனப் பெயரியது, பதின்மூன்றாவது முனிபுங்கவர்களே! வாசிஷ்டமாம், பதினான்காவது வாசிஷ்டம் லைங்கம் எனப் பெயரியது, பதினைந்தாவது மாஹேஸ்வரம் என்று சொல்லப்பட்டது, பதினாறாவது சாம்பபுராணமெனப் பெயரியது, பதினேழாவது மஹாற்புதமாய சௌரம் ஆம், பதினெட்டாவது பாராசரம் என்று சொல்லப் பட்டது, பத்தொன்பதாவது மாரீசம் எனப் பெயரியது, இருபதாவது பார்க்கவம் எனப்பெயரிய சர்வதர்மார்த்தகமாயது சொல்லப்பட்டது". இந்தப் பிரகாரம் உபபுராணங்கள் அநேகப் பிரகாரங்களாகக் காணத் தக்கனவாம்.

ஐந்தத்தியாய வடிவமான நியாய ஆன்வீக்ஷிகியானது கௌதமரால் செய்யப்பட்டது. உத்தேச லக்ஷணப் பரீக்ஷைகளால் பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோஜனம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை, ஏத்வா

பாசம், சலம், ஜாதி, நிக்ரஹஸ்தானம் எனப் பெயரிய பதினாறு பதார்த்தங்களினுடைய தத்துவஞானம் அதன் பிரயோஜனமாம். இங்ஙனமே, பத்தத்தியாயம் பொருந்திய வைசேஷிக சாஸ்திரம் கணாதராற் செய்யப்பட்டது. சாதர்மிய வைதர்மியங்களால்அபாவத்தை ஏழாவதாகவுடைய திரவ்ய குண கர்ம சாமான்ய விசேஷ சமவாயமென்னும் ஆறுபாவ பதார்த்தங்களின் பிரதிபாதனம்அதன் பிரயோஜனமாம். இதுவும் நியாய பதத்தாற் கூறப்பட்டது. இவ்வாறு கர்மமீமாம்சையும் சாரீரகமீமாம்சையுமென மீமாம்சையும் இருவகைத்தாம். அவற்றுள், கர்மமீமாம்சை பன்னிரண்டத்தியாயமுடையது; "அதாதோதர்ம ஜிஜ்ஞாஸா" என்பதுமுதலாக " அன்வாஹார்யேச தர்ஸனத் " "என்பதீறாகப் பகவானாகிய ஜைமினியால் கூறப்பட்டது. (1) தர்மப்பிரமாணம், (2) தர்ம பேதாபேதங்கள், (3) சேஷசேஷிபாவம், (4) கிருத்வர்த்த புருஷார்த்த பேதத்தாற் பிரயுக்தி விசேஷம், (5) சுருத்யர்த்த பாடாதிக் கிரமபேதம், (6) அதிகார விசேஷம், (7) சாமான்யாதிதேசம், (8) விசேஷாதிதேசம், (9) ஊகம், (10) பாதம், (11) தந்திரம், (12) பிரசங்க மென்பன கிரமமாகப் பன்னிரண்டத்தியாயங்களி னருத்தமாம். எனவே, நான்கு அத்யாயவடிவமான சங்கர்ஷண காண்டமும்

ஜைமினி முனிவரால் செய்யப்பட்டது. அதுவும் தேவதாகாண்டப் பெயரால் பிரசித்தமா யிருப்பினும், உபாசனை யெனப் பெயரிய கர்மத்தைக் கூறலாற் கர்மமீமாம்சையி லடக்கமேயாம். அங்ஙனம் நான் கத்தியாய வடிவமாய சாரீரகமீமாம்சை "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாசா" என்பது முதலாக "அநாவ்ருத்திஃ சப்தாத்" என்பதீறாக, ஜீவப்ரஹ்மைக்கிய சாக்ஷாத்கார ஹேதுவான சிரவணமெனப் பெயரியவிசாரத்தைக்கூறும் நியாயங்களைத் தரிசிப்பிப்பதாய்ப் பகவானாகிய வாதராயணரால் செய்யப்பட்டது. ஆண்டு, சர்வவேதாந்தங்கட்கும் சாக்ஷாத்தாகவாவதுபரம்பரையாகவாவதுபிரத்யக்கபின்ன அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் தாத்பர்யம் என்னும் சமன்வயம் முதலத்தியாயத்தாற் றரிசிப்பிக்கப்பட்டது. அதன் கண்ணும் முதற்பாதத்தில்ஸ்பஷ்ட ப்ரஹ்மலிங்க யுக்த வாக்கியங்கள் விசாரிக்கப்பட்டன. இரண்டாவது பாதத்திலோ உபாஸ்ய ப்ரஹ்ம விஷயமாய அஸ்பஷ்ட பிரஹ்மலிங்க யுக்தவாக்கியங்கள் விசாரிக்கப்பட்டன. மூன்றாவது பாதத்திற் பெரும்பான்மையும் ஜ்ஞேய ப்ரஹ்ம விஷயமாய அஸ்பஷ்ட ப்ரஹ்மலிங்க யுக்த வாக்கியங்கள் விசாரிக்கப்பட்டன. இங்ஙனம் முப்பாதத்தால் வாக்கியவிசாரம் சமாப்தி

செய்யப்பட்டது. நான்காவது பாதத்திலோ பிரதான விஷயமாகச் சம்சயிக்கப்பட்ட அவ்யக்த அஜாதிபதங்கள் சிந்திக்கப்பட்டன. இங்ஙனம், வேதாந்தங்கட்கு அத்வைத ப்ரஹ்மத்தின்கண் சமன்வயம் சித்திக்குங் கால் ஆண்டுச் சம்பவிக்கப்பட்ட ஸ்மிருதி தர்க்காதி விரோதத்தை ஆசங்கித்து அதன் பரிகாரம் செய்யப் படுகின்றதென்னும் அவிரோதம் இரண்டாவதத்தியா யத்தாற் றறிசிப்பிக்கப்பட்டது. அதன் முதற்பாதத்தில் சாங்கிய யோக காணாதாதி ஸ்மிருதிகளாலும் சாங்கி யாதிப் பிரயுக்த தர்க்கங்களாலும் உளவாம் விரோதம் வேதாந்த சமன்வயத்திற்குப் பரிகரிக்கப்பட்டது. இரண்டாவது பாதத்தில் சாங்கியாதி மதங்களினது துஷ்டத்வம் பிரதிபாதிக்கப்பட்டது; விசாரத்திற்குச் சுவபக்ஷ ஸ்தாபன பரபக்ஷ நிராகரண ரூப பக்ஷத்வய வடிவமுடைமையின். மூன்றாவது பாதத்தில் மகாபூத சிருஷ்டியாதி சுருதிகட்குப் பரஸ்பரம் விரோதம் பூர்வ பாகத்தாற் பரிகரிக்கப்பட்டது. உத்தரபாகத்திலோ ஜீவ விஷய சுருதிகளினது பரஸ்பர விரோதம் பரிகரிக் கப்பட்டது. நான்காவது பாதத்தில் இந்திரியாதிவிஷய சுருதிகளினது விரோத பரிகாரம் (காட்டப்பட்டது). மூன்றாவதத்தியாயத்தில் சாதன நிரூபணம் (செய்யப்

பட்டது). அதன் முதற்பாதத்தில் ஜீவனுக்குப் பரலோக கமன நிரூபணத்தால் வைராக்யம் நிரூபிக்கப்பட்டது. இரண்டாவது பாதத்தில் பூர்வபாகத்தால் துவம் பதார்த்தம் சோதிக்கப்பட்டது. உத்தரபாகத்தாலோ தத்பதார்த்தம் (சோதிக்கப்பட்டது). மூன்றாவதுபாதத்தில் நிர்க்குண ப்ரஹ்மத்தின்கண் நாநாசாகைகளிற் படிக்கப்பட்ட புனருக்த பதோப சங்காரம் செய்யப்பட்டது. பிரசங்கத்தால் சகுணவித்தைகளில் சாகாந்தரீய குண உபசங்கார அனுப சங்காரங்கள் நிரூபிக்கப்பட்டன. நான்காவது பாதத்தில், நிர்க்குண ப்ரஹ்ம வித்தைக்குப் பகிரங்கசாதனங்களாகிய ஆச்ரம தர்மயஞ்ஞதானாதிகளும் அந்தரங்க சாதனங்களாகிய சமதம நிதித்தியாசனாதிகளும் நிரூபிக்கப்பட்டன. நான்காவதத்தியாயத்திற் சகுண நிர்க்குண வித்தைகளின் பல விசேஷ நிர்ணயம் செய்யப்பட்டது. அதன் முதற் பாதத்தில் சிரவணாதி ஆவிருத்தியால் நிர்க்குண ப்ரஹ்மத்தைச் சாக்ஷாத்காரஞ் செய்து ஜீவிப்பவனுக்குப் புண்ணிய பாப அலேபவடிவமான ஜீவன்முக்தி சொல்லப்பட்டது. இரண்டாவது பாதத்தில் மரணமடைந்தோனுக்கு உத்க்ராந்திப் பிரகாரம் சிந்திக்கப்பட்டது. மூன்றாவது பாதத்தில் சகுண ப்ரஹ்மத்தை யறிந்திறந்தோ

னுக்கு உத்தரமார்க்கம் சொல்லப்பட்டது. நான்காவது பாதத்தில் பூர்வபாகத்தால் நிர்க்குண ப்ரஹ்மவித்துக்கு விதேக கைவல்யப் பிராப்தி சொல்லப்பட்டது. உத்தர பாகத்தால் சகுணப் பிரஹ்மவித்துக்குப் பிரமலோக ஸ்திதிசொல்லப்பட்டது; இதுவே சகல சாஸ்திரங்கட் குச்சிரமாயது. அன்னியசகலசாஸ்திரங்களும் இதற்கே அங்கபூதமாம். இதுவே முமுக்ஷுக்களால்ஸ்ரீசங்கரபூஜ்ய பகவத்பாத ஆசார்ய ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பிரகாரம்ஆதரிக்கத் தக்கதென்பது இரகசியம். இங்ஙனம், மனு யாஞ்ஞவல்க்ய விஷ்ணு யமா அசங்கிரா வசிஷ்ட தக்ஷ சம்வர்த்த சாதாதப பராசர கௌதம சங்கலிகித ஹாரீத ஆபஸ்தம்ப உசனு வியாச காத்யாயன ப்ரஹஸ்பதி தேவல நாரத பைடீனசி முதலாயினோரால் விபாகமாக வருணாச்ரம தர்மங்களுடைய பிரதிபாதகங்களாகிய தர்ம சாஸ்திரங்கள் செய்யப்பட்டன. இங்ஙனம் வியாசராற் செய்யப்பட்ட மகாபாரதமும் வால்மீகராற் செய்யப்பட்ட இராமாயணமும் தர்ம சாஸ்திரத்திலேயே அடக்கமா மென்பது ஸ்பஷ்டம்; இதிகாசத் தன்மை யானே பிரசித்தம்.

நான்கு வேதங்கட்குங் கிரமமாக நான்கு உபவேதங்களுள. அவற்றுள், ஆயுள்வேதத்திற்குச் சூத்திரம்

சாரீரம் ஐந்திரியம் சிகிச்சை நிதானம் விமானம் கல்பம் சித்தியென எட்டுத்தானங்கள் இருக்கின்றன. இது ப்ரஹ்ம பிரசாபதி அஸ்வி தன்வந்திரி இந்திர பரத்வாஜ ஆத்ரேய அக்னிவேசி முதலாயினோரால் அருளப்பட்டது; சரகரென்பவரால் சங்கிரகிக்கப்பட்டது. அதனுள்ளேயே சுசுருதர் என்பவரால் பஞ்சஸ்தான வடிவமான பிரஸ்தாநாந்தரம் செய்யப்பட்டது. இவ்வண்ணமே வாக்பட்டாதியராலும் பலவிதம் (செய்யப்பட்டன); ஆனால், சாஸ்திரபேதமின்று. காமசாஸ்திரமும் ஆயுள்வேதத்திலடக்கமேயாம். சுசுருதரால் வாஜிகரணம் என்னும் பெயரிய காமசாஸ்திரம் சொல்லப்பட்டது. ஆண்டு வாத்ஸ்யாயனரால் ஐந்தத்தியாய வடிவமான காமசாஸ்திரம் செய்யப்பட்டிருக்கிறது. அதற்கும் விஷயவைராக்யமே பிரயோஜனமாம்; சாஸ்திரத்திற் பிரகாசிப்பித்த மார்க்கத்தினாலும் விஷயபோகத்தில் துக்கமாத்திரம் முடிவுபேறுடைத்தாதலின். சிகிச்சா சாஸ்திரத்திற்கும் ரோகம், அதன் சாதனம், ரோகநிவிர்த்தி, அதன் சாதனம் ஞானம் என்பன பிரயோஜனமாம்.

இவ்வண்ணம் தனுர்வேதம் நான்கு பாத வடிவுடைத்து; விஸ்வாமித்திரராற் செய்யப்பட்டது.

அதில் முதலாவது தீக்ஷாபாதம், இரண்டாவது சங்க்ரக பாதம், மூன்ருவது சித்தி பாதம், நான்காவது பிரயோக பாதம். அவற்றுள், முதற்பாதத்தில், தனுவிணிலக்கணங்கூறி அதிகாரி நிரூபணம் செய்யப்பட்டது. ஆண்டுத்தனுவென்னும்சப்தம்வில்லின்கண் † ரூடமாயினும் நான்குவித ஆயுத வாசகமாக இருக்கின்றது. அவை முக்தம், அமுக்தம், முக்தா முக்தம், யந்திர முக்தம் என்பனவாம். அவற்றுள், சக்கிர முதலியன முக்தம்; கட்கம் முதலியன அமுக்தம், சல்லிய அவாந்தரபேத முதலியன முக்தா முக்தம், யந்திரமுக்தம் சரமுதலியன. அவற்றுள், முக்தம் அஸ்திரம் என்று சொல்லப்படும், அமுக்தம் சஸ்திரம் என்று சொல்லப்படும்; அதுவும் ப்ராஹ்ம, வைஷ்ணவ, பாசுபத, பிராஜாபத்ய ஆக்னேய முதலிய பேதத்தால் அநேகவிதமாம். அதி தெய்வங்களோடும் மந்திரங்களோடும் கூடிய நான்குவித ஆயுதங்களினும் எந்த க்ஷத்திரிய குமாரர்களுக்கும் அவரனுயாயிகட்கும் அதிகாரமுண்டோ அவர்யாவரும் பதாதி ரத கஜ துரங்காரூடர் என நான்குவகையினராவர். தீக்ஷாபிடேகசகுன மங்கலகாரணாதிகளாகியவெல்லாம் முதற் பாதத்தில் நிரூபிக்கப்பட்டன.

† இடுகுறியாயினும்.

இரண்டாவது பாதத்தில், சகல சஸ்திர விசேஷங்களினுடைய சங்கிரகணப் பிரகாரம் ஆசாரியருடைய இலக்ஷண வாயிலாகத் தரிசிப்பிக்கப் பட்டது.

மூன்றாவது பாதத்தில், குருசம்பிரதாயசித்த சஸ்திர விசேஷங்களினுடைய அடிக்கடி அப்பியாசமும் மந்திரதேவதைகளின் சித்திகரணமும் நிரூபிக்கப்பட்டன.

நான்காவது பாதத்தில், இவ்வண்ணம் தேவதார்ச்சனப்யாசாதிகளால் சித்தமான அஸ்திர விசேஷங்களினுடைய பிரயோகம் நிரூபிக்கப்பட்டது.

க்ஷத்திரியர்களுடைய சுவதர்மாசரணம் யுத்தம். துஷ்ட சத்ரு சோராதிகளினின்றும் பிரஜாபாலனஞ் செய்தல் தனுர்வேதத்திற்குப் பிரயோஜனம் என இவ்வண்ணம் ப்ரஹ்மபிராஜாபத்யாதிக் கிரமத்தால் விஸ்வாமித்திரரால் செய்யப்பட்டது தனுர்வேதசாஸ்திரமாம். இங்ஙனம் பரதரால் காந்தர்வவேதசாஸ்திரம் செய்யப்பட்டது; அதில் நிருத்திய கீத வாத்திய பேதத்தால் அநேகவித அர்த்தம் விரிக்கப்பட்டிருக்கின்றன. தேவதாராதனமும் நிர்விகல்ப சமாதியாதி சித்தியும் காந்தர்வவேதத்தினுடையபிரயோஜனமாம். இவ்வண்ணம் அர்த்

தசாஸ்திரமும் நீதிசாஸ்திரம் அஸ்வசாஸ்திரம் கஜசாஸ்திரம் சில்பசாஸ்திரம் பாகசாஸ்திரம் அறுபத்திநான்கு கலாசாஸ்திரம் எனப் பலவிதமாம். (சைவாகமங்களிற் கூறப்பட்ட அவ்வறுபத்து நான்கு கலை ஞானங்களாவன:—கீதம் (1) வாத்யம் (2) நிருத்யம் (3) நாட்யம் (4) ஆலேக்யம் (5) விசேஷகச் சேத்யம் (6) தண்டுலகுசுமபலிவிகாரங்கள் (7) புஷ்பாஸ்தரணம் (8) தசனவசனாங்க ராகங்கள் (9) மணி பூமிகாகர்மம் (10) சயனரசனம் (11) உதகவாத்யம் (12) உதகவாதம் (13) அத்புத தர்சனவேதித்வம் (14) மாலாக்ரதன கல்பம் (15) சேகராபீட யோஜனம் (16) நேபத்ய யோகங்கள் (17) கர்ணபத்ரபங்கங்கள் (18) கந்த யுக்தி (19) பூஷண யோஜனம் (20) இந்திர ஜாலம் (21) கௌசுமார யோகங்கள் (22) ஹஸ்தலாகவம், (23) சித்திரசாகாபூப பக்ஷ விகாரக் கிரியைகள் (24) பானக ரச ராகாசவ யோஜனம் (25) சூசீவாபகர்மம் (26) சூத்ரக்ரீடை (27) வீணாடமருக வாத்தியங்கள் (28) ப்ரஹேலிகாப்ரதி மாலைகள் (29) துர்வசகயோகங்கள் (30) புஸ்தகவாசனம் (31) நாடிகாக்யாயிகா தர்ஸனம் (32) காவ்யசமஸ்யா பூரணம் (33) பட்டிகாவேத்ர பாண விகல்பங்கள் (34) தருக்க கருமங்கள் (தர்க்கு என்றும் பாடம்). (35) தக்ஷணம்

(36) வாஸ்தாதுவித்தை (37) ரூப்யரத்னப் பரீக்ஷை (38) தாதுவாதம் (39) மணிராகஞானம் (40) ஆகரஞானம் (41) விருக்ஷாயுர்வேதயோகங்கள் (42) மேஷகுக்குடலாவகயுத்தவிதி (43) சுகசாரிகாப்பிரலாபனம் (44) உத்சாதனம் (45) கேச மார்ஜன கௌசலம் (46) அக்ஷரமுஷ்டிகாகதனம் (47) மிலேச்சிதகவி கல்பங்கள் (48) தேச பாஷாஞானம் (49) புஷ்பசகடிகா நிமித்தஞானம் (50) யந்திரமாத்ருகா (51) தாரணமாத்ருகா (52) அசம்வாச்ய சம்பாட்யம்மான சிகாவ்யக்கிரியா விகல்பங்கள் (53) சலிதகயோகங்கள் (54) அபிதான கோசசந்தோஞானம் (55) கிரியாவிகல்பங்கள் (56) லலித விகல்பங்கள் (57) வஸ்திரகோபனங்கள் (58) த்யூதவிசேஷம் (59) ஆகர்ஷக்ரீடை (60) பாலக்ரீடனங்கள் (61) வைநாயகிவித்யாஞானம் (62) வைஜயிக வித்யாஞானம் (63) வைதலிகீ வித்யாஞானம் (64) என்பனவாம். இவை நாநாமுனிகளாற் செய்யப்பட்டன).

அவ்வெல்லாவற்றிற்கும் லௌகிக அவ்வப் பிரயோஜன பேதங்கள் காணத் தக்கன. இவ்வண்ணம் பதினெட்டு வித்தைகள் 'த்ரயீ' சப்தத்தாற் கூறப்பட்டன; அன்றேல், குறைவுத் தன்மையின் பிரசங்க மூளதாமாதலின்,

அங்ஙனம் சாங்கியசாஸ்திரம் பகவானாகிய கபில ரால் செய்யப்பட்டது. அதில் மூவகைத்துக்க அத்யந்த நிவிர்த்தி அத்யந்தபுருஷார்த்தம் என்றதற்றொடக்கத்து ஆறத்தியாயங்கள் உள. அவற்றுள், முதலத்தியாயத்தில் விஷயங்கள் நிரூபிக்கப்பட்டன. இரண்டாவ தத்தியா யத்தில் பிரதான காரியங்கள்; மூன்றாவ தத்தியாயத்தில் விஷயவைராக்யம்; நான்காவது அத்தியாயத்தில் விரக் தர்களாகியபிங்கல ஆசுரகுமாராதிகளது கதைகள் கூற ப்பட்டுள. ஐந்தாவ தத்தியாயத்தில் பரபக்ஷ நிர்ஜயம்; ஆறாவதில் சர்வார்த்த சங்கிரகம் (கூறப்பட்டன). பிரகிருதி புருஷ விவேக ஞானம் சாங்கிய சாஸ்திரத் தினது பிரயோஜனம். அங்ஙனம் யோக சாஸ்தி ரம் பகவானாகிய பதஞ்சலியாற் செய்யப் பட்டது. அது "அதயோகானு சாசனம்" என்றதற் றொடக்கத்துப்பாத நான்கின் வடிவிற்று. அவற்றுள், முதற்பாதத்தில் சித்த விருத்தி நிரோத வடிவமான சமாதியும் வைராக்கிய ரூபமும் அதன் சாதனமும் நிரூபிக்கப்பட்டன; இரண் டாவது பாதத்தில், விக்ஷிப்த சித்தமுடையவனுக்கும் சமாதி சித்திப்பதன் பொருட்டு யம நியம ஆசனப் பிராணாயாம பிரத்தியாகார தாரணை தியான சமாதிக ளாகிய அஷ்டாங்கங்கள் நிரூபிக்கப்பட்டன; மூன்றாவது

பாதத்தில் யோகவிபூதிகள்; நான்காவது பாதத்தில் கைவல்யம் (கூறப்பட்டன). அதற்கும், விஜாதீயப்பிரத்தியய நிரோதவாயிலாக நிதித்தியாசன சித்திபிரயோஜனமாம். அங்ஙனம் பசுபதிமதம்; பாசுபத சாஸ்திரம்பகவானாகிய பசுபதியால் பசுபாசவிமோக்ஷணத்தின் பொருட்டு "அதாதः பாசுபத யோகவிதிம் வ்யாக்யாஸ்யாமः" என்றற்றொடக்கத் தனவாக ஐந்தத்தியாயமாய்ச் செய்யப்பட்டது. அதில் அத்தியாயம் ஐந்தாலும் காரியரூப ஜீவன் பசு; காரணம்பசுபதி ஈப்வரன்; யோகம் பசுபதியின்கண்சித்தசமாதானம் என விதிபஸ்மத்தால் திரிஷவண ஸ்நாநாதி நிரூபிக்கப்பட்டன. துக்க நாசமெனப் பெயரிய மோக்ஷம் அதன் பிரயோஜனமாம். இவையே காரியா காரணயோகவிதி, துக்காந்தமெனச் சொல்லப்படுகின்றன.

இவ்வாறு சைவமந்திர சாஸ்திரமும் பாசுபதசாஸ்திரத்தின் கண்ணேயே யடக்கமாமென்று காணத்தக்கது. இவ்வாறேயே வைஷ்ணவ நாரதாதிகளாற் பஞ்சராத்ரம் செய்யப்பட்டது. அதில் வாசுதேவ சங்கர்ஷண பிரத்யும்ன அனிருத்தர்கள் என நான்கு பதார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டன. பகவானும் பரமேப்வரனும் இருக்கும் வாசுதேவன் சர்வகாரணம்; அவனிடத்தி

னின்றும் சங்கர்ஷணனெனப் பெயரிய ஜீவனுண்டாகின்றனன். அவனிடத்தினின்றும் மனமென்னும் பிரத்யும்னன், அவனிடத்தினின்றும் அனிருத்தனென்னும் அகங்காரம் (உண்டாயின). இவ்வெல்லாம் பகவானாகிய வாசுதேவருடைய அம்சபூதங்களே; அவரோடும் அபின்னர்களே யாவர், என அந்த வாசுதேவருடைய ஆராதனத்தைத் திரிவித காணங்களாற் செய்து கிருதகிருத்தியனாகின்றான் என்றற் றொடக்கத்தனவும் நிரூபிக்கப்பட் டிருக்கின்றன. இங்ஙனம், வைஷ்ணவ மந்திர சாஸ்திரம் பரிமிதமாயினும் பஞ்சராத்ர மத்தியி லடக்கமாம். வாமாகமாதி சாஸ்திரமோ வேதபாகியமே யாம். இந்தப்பிரகாரம் பிரஸ்தானபேதம் தரிசிப்பிக்கப் பட்டது. யாவருக்கும் சுருக்கமாகமூவிதமே பிரஸ்தானபேதமாம். அவற்றுள், முதலாவது ஆரம்பவாதம்; இரண்டாவது பரிணாமவாதம்; மூன்றாவது விவர்த்தவாதம். பார்த்திவ ஆப்ய தைஜஸ வாயவீயமாய நான்குவித பரமாணுக்கள் துவியணுகாதிக் கிரமமாகப் பிரஹ்மாண்ட பர்யந்தமான சகத்தைத் தோற்றுவிக்கின்றன.

அசத்தே காரிய காரண வியாபாரத்தா லுற்பத்தியாகின்றது என முதலது தார்க்கிகர்க்கும் மீமாம்சகர்கட்குமாம்; சத்வ ரஜஸ்தமோகுணவடிவப்பிரதானமே மகத் அகங்காராதிக் கிரமமாக ஜகதாகாரமாகப் பரிணமிக்கின்றது. முன்னும் சூக்ஷ்மரூபமாகச் சத்தாகவேகாரியம் இருந்து காரணவியாபாரத்தால் வெளியாகின்றது என இரண்டாவது பக்ஷம் சாங்கிய யோக பாசுபதர்களுக்காம்; பிரஹ்மத்தினின்றும் சகத்துப் பரிணாமமென்பதே வைஷ்ணவர்களுக்காம்; ஸ்வப்ரகாச பரமாநந்த அத்விதீயப் ப்ரஹ்மமானது தன் மாயையின் வசத்தால் மித்தையாகவே சகத்தாகாரமாகக் கற்பிக்கின்றது என மூன்றாவது பக்ஷம் பிரஹ்ம வாதிகட்காம். சகலப் பிரஸ்தான கர்த்தாக்களாகிய முனிகளுக்கும் விவர்த்தவாத பர்யவசானத்தால் வேதாந்தப் பிரதிபாத்யமான அத்விதீயப்பரமேஸ்வரனிடத்திலேயே தாற்பர்யமாம். அம்முனிவர்கள் பிராந்தர்களன்று; அவர்களுக்குச் சர்வஞ்ஞத் தன்மையுண்மையின். பின்னையோ பகிர் விஷய (ஆசக்தர்களுக்கு) ப்ரவணர்களுக்கு † முன்னரே

† ஸாமான்யமாகவே ஆரம்பத்திலேயே என்றமாம்.

யே பரமபுருஷார்த்தத்தில் பிரவேசம் உண்டாகாதென நாஸ்திக்ய நிவாரணத்தின் பொருட்டு அம்முனிவரரால் பிரகார பேதங்கள் தரிசிப்பிக்கப்பட்டன.

அவற்றில் அவர்களுடைய தாற்பர்ய மிருத்தலை யறியாது வேதவிருத்தமான அர்த்தத்திலும்தாற்பர்யங் காண்பவர்களாய் அம்மதமே கிரகிக்கத் தக்கதெனக் கிரகிப்பவர்களாய் உள்ள ஜனங்கள் நாநாமார்க்கத்தைப் பூஜிக்கின்றவர்க ளாகின்றார்கள். சர்வம் மங்கலம்.

பிரஸ்தான பேதம்.

முற்றிற்று.

